# கலீர் கலீர்

எல்லார்வி



அல்லயன்ஸ் கம்பெனி
தபால் பெட்டி நெ. 617
மயிலாப்பூர் :: சென்னை - 4

-ரிமை பதிவு - முதற் பதிப்பு - ஜு-லை 1959

# பொருளடக்கம்



1-25

அல்லயன்ஸ் பிரஸ், மயிலாப்பூர், சென்னை-4

# முகவுரை

கர்நாடக இசைக் கலை மேதைகளின் வாழ்க்கையிலே பிரமிக்கத்தக்க அரிய நிகழ்ச்சிகள் எத்தனையோ புதைந்து கிடக்கின்றன காலஞ்சென்ற வயலின் வாத்திய மேதை **மலைக் கோட்டை கோவிந்தசாமி பிள்ளை** அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த சிறந்த நிகழ்ச்சிகளில் ஒன்று இந்த நாவலுக்குக் கருவாக அமைந்தது.

சென்னையில் வாழ்ந்து வந்த செல்வம் மிக்க குடும்பம் ஒன்றிலே ஒருவருக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டிருந்தது. எத்தனையோ சிகிச்சைகள்; ஏராளமான செலவுகள்; பயன் சிறிதும் இல்லை. இறுதியில் மனத் தத்துவ நிபுணர் ஒருவர் நல்ல இசையை - அமைதியான வாத்திய இசையை - சிபாரிசு செய்தார்.

பலர் கூடி ஆலோசித்தார்கள். கோவிந்தசாமி பிள்ளை அவர்களின் உதவியை நாடினார்கள். இசையின் பெருமையை உள்ளபடி அறிவதில் ஆர்வம் மிகுந்த அவரும் முழு மனத்தோடு இசைந்தார்.

ஒவ்வொரு நாளும் ஏறக்குறைய ஒரு மணி நேரம் அவர் நோயாளியின் அருகே இருந்து வயலின் இசைத்தார். முயற்சி வீண் போகவில்லை. நோயாளி நாளுக்கு நாள் குணம் பெற்றுக்கொண்டே வந்தார். பதினெட்டாம் நாள் முழுவதும் குணம் பெற்றார்.

உள்ளம் பூரித்த பிரபுக் குடும்பத்தினர் பிள்ளை அவர்களுக்குக் கனகாபிஷேகம் செய்வித்தனர். வயலின் இசைத்த கரத்திற்கு நவரத்தினங்கள் இழைத்த தங்கத் தோடா அணிவித்தனர். ஏராளமான சம்மானம் செய்தனர். அந் நிகழ்ச்சியைச் செப்புத் தகட்டில் பொறித்து அவரிடம் அளித்துக் கௌரவித்தனர்.

இந் நிகழ்ச்சியைக் கட்டுரையாக எழுதினேன். அத்துடன் என் மனம் திருப்தி பெறவில்லை. இத்தகைய ஒரு நிகழ்ச்சியைப் பின்னணியாக்கி நல்ல கதை ஒன்று புனைய வேண்டும் என்று என மனம் பரபரத்துக்கொண்டே இருந்தது.

மனத்தில் அலை மோதிக்கொண்டிருந்த மேற்குறித்த நிகழ்ச்சியை அடிப்படையாக்கி ஒரு குறு நாவலை எழுதினேன். **"ஆடும் தெய்வம்" என்று** அதற்குப் பெயர் இட்டேன். குமுதம் மலரில் அது **'கலீர் கலீர்'** என்ற பெயரில் வெளியாயிற்று. லட்சத்திற்கு மேற்பட்ட வாசகர்கள் படித்தார்கள், மகிழ்ந்தார்கள், பாராட்டினார்கள்.

பழம் பெரும் பதிப்பகம் என்று புகழ்பெற்ற **அல்லயன்ஸ் கம்பெனியார்** இதற்கு முன் என்னுடைய நூல்களில் நான்கு வெளியிட்டிருக்கிறார்கள். அவை முறையே, **மணி ஓசை** (சிறு கதைத் தொகுதி) **நீர்க் குமிழி** (நாவல்) **அஞ்சாத சிங்கம்** (சிறுவர் கதைத் தொகுதி) **பூங்குளம் பண்ணையார்** (மேடை நாடகம்) ஆகியவை ஆகும். அவர்கள் இந்த நாவலையும் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறார்கள்.

இந்த நாவலில் வரும் பாத்திரங்களின் தன்மை, செயல்கள், சூழ் நிலைகள், நிகழ்ச்சிகள் முதலியவற்றை நன்கு ரசித்த அன்பர்கள் பலர் இந்தக் கதை திரைப் படம் ஆக்குவதற்கு மிகவும் ஏற்றது என்றார்கள். அவர்களின் தீர்க்க தரிசனம் பாராட்டத் தக்கது.

திரைப்பட உலகில் தனிப் புகழ் பெற்ற திரு. **ப. நீலகண்டன்** அவர்கள் 'கலீர் கலீர்' என்ற இந்த நாவலைத் திரைப் படமாக்கும் உரிமையை என்னிடம் பெற்று ஆக்க வேலைகளில் ஆர்வத்தோடு ஈடுபட்டிருக்கிறார் என்பதைப் பெரு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்றும் என்னிடம் குன்றாத அன்புடைய என் லட்சக் கணக்கான வாசகர்களுக்கு இந்த நாவலைப் புத்தகமாகப் படிக்கவும், திரைப் படமாகப் பார்க்கவும் அடுத்தடுத்து வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கும்பேறு எனக்குக் கிட்டியதை எண்ணிப் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். இந் நிலைக்குக் காரணர்களாக அமைந்த கர்நாடக இசைக் கலைஞர்கள், குமுதம் ஆசிரியர், அல்லயன்ஸ் கம்பெனியார், திரு. ப. நீலகண்டன், ரசிக அன்பர்கள் அனைவருக்கும் நன்றி வணக்கம்.

**'விஜய விலாசம்'**
சென்னை - 4
10—6—1959

— **எல்லார்வி**

# கலீர் கலீர்

## 1. ஆடும் தெய்வம் நீ அருள்வாய்!

என்றுமே இயற்கை எழில் நிறைந்த சங்கரபுரம், அன்று அதிகமான சோபையுடன் திகழ்ந்து கொண்டிருந்தது. புது வெள்ளம் வந்து ஆறு குளங்களெல்லாம் நிறைந்து விவசாயிகளிடையே புதிய உற்சாகத்தை உண்டு பண்ணியிருந்தது.

பாட்டாளிகள் வீடு திரும்பும் மாலை நேரம். மலை வாயில் விழுந்து கொண்டிருந்த மாலைக் கதிரவனின் தங்கமயமான ஒளி வெள்ளத்திலே மிதந்து கொண்டிருந்த சங்கரபுரத்தின் இயற்கைத் தோற்றம் எழில் முறுவலைச் சிந்தியபடி இருந்தது. ஊரின் நடு நாயகமாக விளங்கிய ஆலயத்தின் வானளாவிய கோபுரத்தின் உச்சியிலே நிறுவப்பட்டிருந்த பொற் கலசம் கண் கூசும் வனப்புடன் தகதகவென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது.

கோயிலின் எதிரே பெரிய குளம். புது வெள்ளத்தின் செந்நீரால் நிறைந்து அலைமோதிக்கொண்டிருந்த அதன் கரைகளின் முப்புறங்களிலும் ஒழுங்

கான மூன்று தெருக்கள். அவற்றிலே வரிசையாக அமைந்த பல வீடுகள். அக்கிரகாரங்கள் கோயிலுக்கு மேற்புறத்தில் இருக்கின்றன; பாட்டாளிகள் வாழும் இடம் ஊரின் எல்லையிலே இருக்கிறது.

இங்கே வசிப்பவர்கள் தலைமுறை தலைமுறையாய்க் கோயில் ஊழியர்கள். ஊழியர்கள் என்றால் மெய்காவலர், நாதசுரக்காரர், திருமாலை கட்டி, உருத்திர கணிகையர் - இப்படிப் பலர்.

தெற்குத் தெருவின் முகப்பிலே சற்று எடுப்பாகத் தெரிவதுதான் ஒரு காலத்தில் மிகப் பிரசித்தமாக இருந்த மரகதத்தின் வீடு. இப்போது அவள் ஐம்பது ஆண்டுகளைக் கடந்தவள். ஆனால் அன்று அவளுடைய கடைக் கண் பார்வைக்கு உரிய மதிப்பே தனி. எழில், இசை, நடனம் ஆகிய அம்சங்களில் அத்தனை உயர்வுடையவளாக இருந்தாள் அவள். இப்போதும் - இந்த முதுமையிலுங்கூட-அவளிடம் அந்த உயர்வின் சாயல் தென்படத்தான் செய்கிறது.

ஆலயத்திலிருந்து சாயரட்சைப் பூசைக்குரிய மேளதாள முழக்கங்களுடன் ஆலாட்சி மணியின் ‘டணார் டணார்’ என்ற ஒலியும் சேர்ந்து, காற்றிலே கலந்து, திசை எங்கும் பரவிக் கொண்டிருந்தது. சந்நிதியிலே உள்ள படித் துறையிலே பலர் இறங்கிக் கால் கை கழுவிக்கொண்டு அமைதியுடைய உள்ளத்துடன் ஆலயத்துள் பிரவேசித்துக் கொண்டிருந்தனர். அப்படிப் பிரவேசிக்கிறபோது ஆலய ஆரவாரங்களுக்கிடையேயும் அவர்கள் செவியிலே மற்றொரு ஒலியும் விழத் தவறவில்லை. குழல், ஆர்

மோனியம், மத்தளம் இவை பின் தொடர இனிய குரலில் எழும், 'ஆடும் தெய்வம் நீ அருள்வாய்' என்ற பாட்டும், அதன் தாளத்திற்கமைய, 'கலீர், கலீர்' என்ற சதங்கை ஒலியும் கூடி, 'ஆகா, ஆகா' என்றுதான் அனைவரையும் சொல்ல வைத்தன. மரகதத்தின் வீட்டிலிருந்துதான் அந்த ஆடல் பாடலின் ஆரவாரம். அங்கே....

அந்தப் பாட்டும் அதற்குரிய ஆட்டமும் முடி வடைந்தன. அடுத்த வாரம் அரங்கேறறம். அதற் காகப் பக்க மேளங்களுடன் ஒத்திகை. இன்னும் பாதிக்குமேல் பாக்கி இருக்கிறது. அதற்குள் பெருமை யும் சந்தோஷமும் தாங்கமுடியவில்லை, நட்டுவனார் சிவானந்தம் பிள்ளைக்கு. உற்சாகத்துடன் அவர் சொன்னார்.

"நான் விளையாட்டுக்குச் சொல்லல்லே மரகதம்; என் மனசிலே எப்போ பார்த்தாலும் ஏதோ ஒண்ணு அப்படி சொல்லிக்கிட்டே இருக்கு. அதுக்கு ஏத்தாப் போலே நம்ம பவானி முகத்திலே நாளுக்கு நாள் அபூர்வமான ஒரு பிரகாசம் அதிகமாயிகிட்டே வருது. அதுதான் அப்படீன்னு நாட்டியத்திலே அவ முன்னேறுகிற வேகத்தைப் பார்த்தா. . ."

சிவானந்தம் பிள்ளை தங்குதடையின்றி வருணித் துக்கொண்டே போனார். மரகதத்திற்குப் பெருமை பிடபடவில்லை. குதூகலத்தால் உள்ளம் துள்ள, சிவானந்தத்தையும் பவானியையும் மாறி மாறிப் பார்த்தாள்.

பவானி நடுக் கூடத்திலே அலங்காரமாக ஏற்றி வைத்த குத்துவிளக்கைப் போல் ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருந்தாள். நாட்டிய அலங்காரத்துடன் ஜொலித்த அவள் தோற்றம் 'தேவலோகத்து அப்ஸரஸ்' என்பார்களே, அப்படி ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

மரகதம் சொன்னாள். "அண்ணே, என் அநுபவத்திலே உன்னோட ஊகமோ, சொல்லோ தவறினதே இல்லை. அன்னிமுதல் இன்னிவரைக்கும் பவானியைப்பத்தி நீ இப்படியேதான் சொல்லிக்கிட்டிருக்கே. அதன்படி நடந்தா முதல் பெருமை உனக்குத்தான்."

மரகதம் தன் வார்த்தைகளை முடிக்கும் தறுவாயில் கூடத்திலே படபடவென்று சில சொற்கள் உதிர்ந்தன. பவானிதான் பேசினாள்.

"சின்னப் பிள்ளைங்க தட்டாரப்பூச்சியைப் பிடிச்சு வச்சிகிட்டு விளையாடுவாங்க. அவங்க கொண்டாட்டம் அதுக்குத் திண்டாட்டம். அதைப் போலத்தான் இருக்கு உங்க காரியமும். ஒரு நாளைப்போல நிதமும் என்னைக் கொண்டுவந்து இங்கே நிறுத்தி வைக்க வேண்டியது; நீங்க பாட்டுக்கு ஏதாவது வீண் கதையெல்லாம் பேசிக்கிட்டிருக்க வேண்டியது; பேச்சிலே பகற் கனவு கண்டு அதிலே முழுகிப் போயிடவேண்டியது; பாதி ஆட்டத்திலே நான் மரமாட்டம் நின்னுக்கிட்டிருக்கவேண்டியது! எம்பாடு எம வாதனையா இருக்கு. போதாக் குறைக்கு இந்த நாட்டிய உடை வேறே என் உடம்பை இறுக்கிச் சித்திரவதை செய்யுது!"

"ஆமாம் அண்ணே; பாவம், பாடத்தைக் கவனி."

"இதோ" என்று தட்டும் குச்சியைக் கையில் எடுத்தார் சிவானந்தம் பிள்ளை.

தெருக் கோடியிலே 'பாம், பாம்' என்று மோட்டார்க் குழலின் ஒலி கேட்டது; வரவர அது சமீபித்துக்கொண்டிருந்தது. பவானி சிவானந்தம் பிள்ளையின் பாடலை அநுசரித்து அற்புதமான முறையில் அபிநயம் பிடித்து ஆடிக்கொண்டிருந்தாள். சிறிது நேரத்துக்குள் கார் ஒன்று அந்த வீட்டின் முன் வந்து நின்றது.

## 2. பித்தம் தெளிய மருந்து

மரகதம் எழுந்து முன் பக்கம் விரைந்தாள். காரிலிருந்து இருவர் இறங்கி வந்தார்கள். டிரைவர் சில பொருள்களைச் சுமந்தபடி பின்னே வந்தான். மரகதம் வந்தவர்களைக் கும்பிடு போட்டு வரவேற்றாள். அனைவரும் வீட்டினுள் பிரவேசித்தனர்.

சிவானந்தம் பிள்ளை பயிற்சியைப் பொட்டென நிறுத்தினார். புது மனிதர்களைக் கண்ட பவானி சரேலென்று மின்னலைப்போல், அருகே உள்ள அறையிலே பாய்ந்து மறைந்தாள். ஆயினும் வந்த மனிதர்கள் அந்த நொடிக்குள் அவளைப் பார்த்து விட்டார்கள். 'ஆகா! என்ன அழகு! எத்தகைய சௌந்தரியம்! எவ்வளவு ஒயில்!' என மனசுக்குள் வியந்து கொண்டார்கள்.

மரகதம் அவர்களை மரியாதையாக வரவேற்றுக் கூடத்திற்கு இட்டுச் சென்று விரிப்பின்மீது அமரச் செய்தாள். டிரைவர் காரிலிருந்து சுமந்துவந்த பழம், புஷ்பம், தாம்பூலம், கற்கண்டு, பட்டுடை முதலிய மங்கலப் பொருள்கள் கூடத்தை நிறைத்தன.

வந்தவர்களில் முதியவர் கேட்டார்: "மரகத அம்மாள் நீங்கள்தானே?"

"ஆமானுங்க" என்று வெற்றிலைக் காவி ஏறிய பல்தெரியச் சிரித்தாள் மரகதம். சிரிப்பு, முழுச் சிரிப்பாக இல்லை; அதில் கவலையின் சாயல் நன்குகப் படிந்திருந்தது. மறுபடியும் பெரியவர் பேசினார்.

"பெரியநத்தம் ஜமீன்தார் தனபாலனின் தம்பி இவர். பெயர் ஜயபாலன். நான் ஜமீன் காரிய தரிசி. என் பெயர் சுந்தரமூர்த்தி. பெரிய ஜமீன்தார் படுக்கையில் இருக்கிறார். உடற்கோளாறு இல்லை; உள்ளக் கோளாறுதான்."

அடி வயிற்றிலே இடி விழுந்தாற்போல் இருந்தது மரகதத்திற்கு. 'ஐயோ! எதிர் பார்த்துப் பயந்ததுக்கு ஏற்றபடியே இருக்கே! கிழட்டு ஜமீன்தாருக்கு மன நோய்; என் பச்சைக்கிளி பவானியைப் பலி கேக்க வந்திருக்காங்களா?'-அவள் நெஞ்சம் படபடவென்று அடித்துக் கொண்டது.

பெரியவர் மீண்டும் சொன்னார்: "எங்கள் ஜமீன் தார் அவர்களுக்கு ஒரே வாரிசுதான். அவர்களுக்கு மட்டும் என்ன; ஜமீனைத் தொடர்ந்த நாலைந்து குடும் பங்களுக்கும் அந்த ஒரே வாரிசுதான். பெரியவரின் மகன் பெயர் கோபாலன். அழகிலும் அறிவிலும்

இணையற்றவன். கலைகள் பலவற்றில் தேர்ச்சி பெற்றவன். மகா மேதாவி....''

மரகதத்தின் உள்ளத்தில் இப்பொழுது பழைய அச்சம் இல்லை. பெரியவர் பேச்சு ஜமீன் இளவரசான கட்டிளங்காளையின் பக்கம் திரும்பினதால் உள்ளத்திலே ஒரு கிளுகிளுப்பே ஏற்பட்டது. எனினும், 'மேட்டுக்கு அப்பால் பள்ளம்தானே? இளவரசைப் பற்றின வருணிப்பின் முடிவிலே ஏதோ பயங்கரச் செய்தி ஒன்று வெளிவரப் போகிறது' என ஊகித்தாள். அவள் ஊகம் தவறல்ல என்பதை உடனே காரிய தரிசி நிரூபித்தார்.

“இருபது பிராயம் வரையில் அதிமேதாவியாக விளங்கிவந்த கோபாலன் இருபதாவது வயதில் மூளைக் கலக்கத்திற்கு உள்ளானான்...'' என்று கூறுகையில் பெரியவரின் நாத் தழுதழுத்தது; சொற்கள் தடுமாறின; பெருமூச்சு வெளிப் போந்தது.

மரகதம் பதறிய குரலில், “அடாடா! என்ன நேர்ந்தது?'' என்றாள். காரியதரிசி சொன்னார்:

“நிதானத்தை மீறிய எதுவும் ஆபத்துக்கு உள்ளாகும் என்று அநுபவஸ்தர்கள் சொல்வார்கள். புத்தி விஷயமும் அப்படித்தான். கோபாலன் அதி மேதை. அவன் உள்ளம் கலைகளில் அளவைக் கடந்த ஈடுபாட்டைக் கொண்டது. எப்பொழுது பார்த்தாலும், 'கலை, அழகு, கலை, அழகு'-இதுவேதான் நினைவு. அழகான ஓவியங்களை வரைவதிலும், இசை, நிருத்தியம் போன்ற கலைகளை ரசிப்பதிலும், கையாள்வதிலும் இணையற்றவனானான்.

"ஒரு சமயம் தாராபுரம் என்ற இடத்தில் பரிசுப் போட்டி ஒன்று நிகழ்ந்தது. பல பிரதேசங்களிலிருந்து கலைஞர்கள் பலர்வந்து அதிலே கலந்துகொண்டனர். கோபாலனும் சென்றிருந்தான். அங்கே என்ன நடந்ததோ; அவன் இளம் உள்ளம் உடைந்து துகள் துகளாகச் சிதறிப்போய் விட்டது. பைத்தியக்காரக் கோலத்துடன் திரும்பி வந்தவன், 'எது உண்மை அழகு? எது சுஸ்வரமான இசை?' என்றெல்லாம் தனக்குத்தானே கேட்டுக் கொள்வதும், கோரமான படங்களை எழுதி அவற்றைப் பார்த்துக் கோடை இடி போல் சிரிப்பதும், வீணை முதலிய வாத்தியங்களை அபஸ்வரமாக இசைத்து அவை இடும் அவல ஒலிக் கேற்பத் தானும் அவலமாக ஓலமிடுவதுமாக இருக்கிருன்.

•

"இப்படி ஓர் ஐந்து ஆண்டுகள் கடந்து விட்டன. இதுவரை நாங்கள் வேண்டாத தெய்வம் இல்லை; செய்யாத வைத்தியம் இல்லை; தேடாத பரிகாரம் இல்லை. பலன் பூஜ்யம். ஐந்து ஆண்டுகளுக்கு முன் குண்டு போட்டுச் சுட்டாலும் அசையாத உடல் உடையவராக இருந்த அவன் தந்தை அதாவது, எங்கள் பெரிய ஜமீன்தார், மகனின் நிலை கண்டு மனம் மறுகிப் படுத்த படுக்கையாக ஆகிவிட்டார். இன்னும் சிறிது காலம் இப்படியே நீடித்தால் அவர் ஆவி துடிதுடித்துக் கூட்டைவிட்டு வெளியேறிவிடும். அது மட்டுமா? அந்த ஒரே ஒரு கிளையை நம்பியிருக்கும் ஜமீனைச் சார்ந்த பல குடும்பங்கள் நசித்தே போய்விடும். பல குடும்பங்களின் சிகரம் எங்கள்

இளைய ஜமீன்தார். அந்தச் சிகரம் முறிந்து விழுந்து விடாமல் பாதுகாக்கவேண்டியே உங்கள் தயவை நாடி இங்கே வந்திருக்கிறோம்.”

திறந்த வாய் மூடாமல் அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த மரகதத்தின் மூளை குழம்பியே போய் விட்டது. அதுவரை அவர் என்ன சொன்னார், தான் அதற்கு என்ன பதில் சொல்லவேண்டும் என்பன புரியாமல் திகைத்தாள்.

பெரிய பேச்சு ஆரம்பமானதுமே பக்கவாத்தி யக்காரர்கள், ‘இனியும் தாங்கள் அங்கே இருப்பது உசிதமல்ல’ என்றெண்ணியவர்களாய் அங்கிருந்து மெல்ல நழுவி யிருந்தனர். சிவானந்தம்பிள்ளை மட்டும் நடையிலே தலைமறைவாகச் சற்று நேரம் நின்று உள்ளே நிகழும் உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு அவரும் போய் விட்டார்.

பவானி?—அவள் உட்புறம் சென்றவள் சென்ற வளே. எங்கே இருக்கிறாளோ, என்ன செய்கிறாளோ! ஆக, கூடத்தில் இருந்தவர்கள் மரகதமும் அவளைக் காணவந்த ஜமீன் சம்பந்தப்பட்டவர்களுமே.

பேச வகையறியாது சற்று நேரம் திகைத்த மரகதம், “அதுசரி . . . அதுக்கு நாங்கள் . . .?” என்றாள்.

“சொல்லுகிறேன். எந்த வைத்தியமும் எத் தகைய மாந்திரீகமும் பயன் இல்லை என்றானதும் நண்பர் ஒருவரின் ஆலோசனைப்படி இந்தியாவிலேயே தலை சிறந்த மனத்தத்துவ வைத்திய நிபுணராக விளங்கும் ஒருவரை வரவழைத்தோம். நாலு நாள்

உடன் இருந்து பார்த்த அவர் முடிவில் பின்வருமாறு சொன்னார்:,'பையனின் மூளையிலே அதிகக் கோளாறு எதுவும்இல்லை. ஒரே ஒரு சிறு குறை. அதைப் போக்க ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுவே சுலபம்; அதுவே கஷ்டம். இணையற்ற எழில் மங்கை ஒருத்தி ஆடல் பாடல்கள் மூலம் அவனைத் திருப்தி செய்விக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மட்டுமல்ல, சதா கூடவே இருந்து ஆடல் பாடலாலும் சாகசப் பேச்சினாலும் மோகனச் சிரிப்பினாலும் அவனுக்கு மன உல்லாசத்தை உண்டுபண்ணவேண்டும். சுருங்கச் சொன்னால் அவளால் ஆட்டி வைக்கப்பெறும் பொம்மையாக அவன் ஆகி, அந்தப் பொம்மை நிலையிலிருந்து சரியான உணர்வுடைய ஆடவனாக ஆகவேண்டும் இது ஒன்றுதான் கடைசிச் சிகிச்சையாக எனக்குத் தோன்றுகிறது' என்றார்.

"அவர் மேற்பார்வையிலேயே அந்தச் சிகிச்சையை நடத்திவிடவேண்டும் என்று உடனேயே அவர் குறிப்பிட்ட லட்சணங்கள் நிறைந்த பெண்ணைத் தேடிஅலையலானோம். திருப்திகரமாகயாரும் கிடைக்கவில்லை. கிடைத்த சிலரையும் பயன் இல்லை என்று அந்த அறிஞர் தள்ளுபடி செய்து விட்டார். கடைசியில் ஊரிலிருந்து அவருக்கு அவசர அழைப்பு வரவே அவர் கிளம்பிப் போய் விட்டார். அதன் பிறகும் நாங்கள் மேலே குறிப்பிட்ட முறையில் ஒரு பெண்ணைத் தேடி அலைந்தோம். கிடைக்கவில்லை. இறுதியில் நேற்று உங்கள் மகளைப்பற்றிக் கேள்விப்பட்டோம் உடனே உங்களைக் காண வந்திருக்கிறோம். நீங்கள் பெரிய மனம் வைத்து எப்படியாவது எங்கள் குலக்

கொழுந்தைக் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும். நீங்கள் மறுத்தால் எங்களுக்குப் புகலிடமே இல்லை'' என்று கூறி நிறுத்தினார் காரியதரிசி.

## 3 பணம் என்றால் . . . .

இதுவரையில் பொறுமையோடு அனைத்தையும் கேட்டு வந்த மரகதம் இப்போது பெண் புலியாய் மாறினாள். முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. கண்கள் நெருப்புத் துண்டங்களாய் ஜொலித்தன. ஆத்திரத்தால் கையுங் காலும் வெடுவெடுத்தன.

"எத்தனை துணிச்சல் இருந்தால் நீங்க இத்தனை அவகேடான சேதியோடே என்கிட்டே வருவீங்க? உங்க வீட்டுப் பிள்ளையைக் காப்பாத்த எங்க வீட்டுப் பெண்ணைப் பறி கொடுக்கவேணுமா? நல்ல கதை! பிள்ளை குட்டிகளைப் பெத்தவங்கதானே நீங்க? எப்படி மனம் வந்தது உங்களுக்கு, என் மகளைப் பலி கேக்க! ஹூம்!.... எங்க நினைப்பு என்ன, அறிஞ்சவங்க தெரிஞ்சவங்க எதிர்பார்த்துக் கிட்டு இருக்கிறது என்ன? நீங்க கருதி வந்திருக்கிற காரியம் என்ன? உங்க மேலே பிசகில்லை; நான் பிறந்த வேளையின் மகா பாவம் இருக்கே, அது உங்க உருவத்திலே வந்து என்னை இப்படி ஆட்டி வைக்குது! என் மகளோட அழகுக்கும், அறிவுக்கும், பாட்டுக்கும், பேச்சுக்கும், சிரிப்புக்கும், சிங்காரத் துக்கும் அவ மேடை ஏறின நாள் ஒண்ணுக்கு நானூறு ஐந்நூறு சம்பாதிப்பா என்கிறது ஊரறிஞ்ச

விஷயம்; அப்படிப்பட்ட பெண்ணை, அநியாயமாய்ப் படுகுழியிலே தள்ளச் சொல்றீங்களே; உங்களுக்கு நெஞ்சு என்ன கருங்கல்லா? இரும்புத் துண்டா?"

மரகதத்தின் படபடப்பான பேச்சைக் கேட்டு அவர்கள் அயர்ந்து போய்விடவில்லை. எதிர்பார்த்த மறுப்புத்தானே? ஆகவே, காரியதரிசி முன்னிலும் அழுத்தமாகவும் உருக்கமாகவும் பேசலானார்.

"அம்மா, நாங்களும் பிள்ளை குட்டிகளைப் பெற்றவர்கள்தாம். உங்கள் மகளுக்குக் கேடு நேரும்படி நாங்கள் எதையும் சொல்லமாட்டோம். வைத்திய நிபுணர் சொன்ன முறைப்படி உங்கள் மகள் எங்களுக்கு உதவுகிற காலத்தில் நீங்களும் நாங்களும் உடனிருந்து கண்காணித்து வரலாம். உங்கள் மகளுக்கு எந்தவிதமான தொந்தரவும் இல்லாது கவனித்துக்கொள்ள முடியும். தவிர, உங்கள் மகள் மேடை ஏறினால் நாள் ஒன்றுக்கு நானூறு ஐந்நூறு சம்பாதிப்பாள் என்கிறீர்கள். அதை நாங்களும் ஒருவாறு உணர்ந்தவர்களே. அந்தச் சம்பாதனம் எங்கும் தவறிவிடாது. சுமார் ஒரு மாத காலம் எங்களுக்கு உதவிய பின் நீங்கள் தாராளமாக அந்தச் சம்பாதனத்தை மேற்கொள்ளலாம். முழுசாக முப்பது நாள். அதற்கு உங்கள் கணக்குப்படி பதினைந்து ஆயிரம். நாங்கள் இரண்டத்தனையாகத் தரச் சித்தமாக இருக்கிறோம். பாதித் தொகையான ரூபாய் பதினையாயிரமும், இப்போதே கொடுத்து விடுகிறோம். மீதிப் பதினையாயிரமும் ஒரு மாதத் தவணை முடிந்ததும் - எங்கள் இளைய ஜமீன்தார் குணம் பெற்றாலும் பெறாவிட்டாலும் - கொடுத்து

விடுகிறோம். எங்களுக்குப் பாக்கியம் இருந்து, இளைய ஜமீன்தார் குணம் பெற்றால் . . . அந்த மகிழ்ச்சியிலே பெரிய ஜமீன்தார் உங்கள் மகளுக்கு அளிக்கும் விசேஷ வெகுமதி தனி! . . .”

இப்படிச் சொல்லிக்கொண்டே காரியதரிசி தம் கையில் இருந்த பெரிய தோல் பையைத் திறந்து அதிலிருந்து பதினையாயிரம் ரூபாய்க்குக் ‘கரன்ஸி’ நோட்டுக்களை எடுத்து மரகதத்தின் எதிரே இருந்த தாம்பூலத் தட்டிலே வைத்தார்.

ஒரே சமயத்தில் அத்தனை பெரிய தொகையை ஒருபோதும் பார்த்தறியாத மரகதத்தின் உள்ளமும் கண்களும் ஒருங்கே மலர்ந்தன. சந்தோஷ உணர்ச்சியினால் அவளுக்கு மூச்சுத் திணறிற்று. நொடிக்குள் அவள் மனநிலை மாறிவிட்டது. பொறுப்பை ஏற்றுக் கொண்டு விடுவது என்ற முடிவுக்கு வந்தாள். ஆயினும் அவ்வளவு எளிதில் இணங்கி விடவும் மனம் இல்லை. சற்றுப் பேச்சை ஒட்ட நினைத்து ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள், அதுவரை வாய் திறவாதிருந்த சின்ன ஜமீன்தார் பேசலுற்றார்.

“அம்மா, எங்களுக்கு நேர்ந்திருக்கும் கேடு மிகப் பெரிது. அதற்குப் பரிகாரம் தேட இணங்கினால் நீங்கள் செய்யும் தியாகம் மிக மிகப் பெரிது. உங்கள் உதவிக்கு இந்தப் பொருள் ஈடே இல்லை. இது ஓர் அன்பளிப்பு; அவ்வளவுதான். சுருக்கமாக நான் கூறும் ஒரே வார்த்தை - வேண்டுகோள் - இதுதான்: நாலைந்து குடும்பங்களின் நாசத்தைத் தவிர்த்து, எங்கள் குடும்பச் சிகரம் முறிந்து விழாமல் பாது

காக்கவேண்டும் என்று உங்களை நயந்து வேண்டிக் கொள்கிறேன்."

மரகதம் தன் சம்மதத்தைத் தெரிவிப்பது இப் போது சுலபமாக ஆகிவிட்டது. சாதுரியமாகப் பேச்சை ஓட்டினுள். "அடாடா! உங்க பரம்பரையின் மதிப்பென்ன, கேவலம் என்னுேட நிலைமை என்ன? நீங்க நயந்து என்னை வேண்டவாவது! கஷ்டம் வருவதும் சந்தோஷம் வருவதும் கடவுள் செயல். நம் கையிலே என்ன இருக்கு? யார் யாருக்கு எப்ப எப்ப என்ன என்ன நேரும்னு யாராலே சொல்ல முடியும்? நீங்க சொல்ற மாதிரி, மனிசருங்க ஒருத்தருக்கொருத்தர் உதவறதுக்கு இல்லாமே வேறே எதுக்கு இருக்கிறது? உலகத்திலே பணந்தானு பெரிசு? நீங்க சொல்றதை யெல்லாம் கேக்கக் கேக்க எம் மனசு ரொம்ப சங்கடப்படுது. ஆனு...."

"என்ன அம்மா? எதுவானுலும் கூசாமல் சொல்லுங்கள்" என்ருர் காரியதரிசி.

"நாங்க தினசரி இங்கே யிருந்து ..."

"அதெல்லாம் வேண்டாம் அம்மா. நீங்கள் குடும்பத்தோடே ஒரு மாசமும் அங்கேயே தங்கி இருக்கலாம். அரண்மனையில் பல விடுதிகள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்றில் நீங்கள் இருக்கலாம். அங்கே உங்களுக்கு ஒரு குறைவும் இராது."

"நல்ல காரியந்தான். ஆனுலும் மூளை சரியில்லாதவங்க கிட்டே நெருங்கிப் பழகறது நெருப்போடே விளையாடற மாதிரி. கடவுள் துணையிருந்து யாருக்கும் எந்தக் கெடுதலும் நேராமே காப்பாத்த வேணும்."

''உங்கள் நல்ல மனசுக்கு எல்லாம் சரியாய் நடக்கும் அம்மா.''

சின்ன ஜமீன்தாரும் காரியதரிசியும் எழுந் தார்கள்.

''நாளை இங் நேரத்துக்குக் காருடன் வருகிறேன். தயாராக இருங்கள்'' என்றார் காரியதரிசி. மரகதம் கரங்கூப்பி அவர்களுக்கு விடையளித்தாள்.

அவர்கள் சென்றதும் தட்டில் இருந்த பணத்தை அள்ளி எடுத்துக் கொண்டு உள்ளே சென்ற அவள், அங்கே தன் மகள் பவானி குப்புறப் படுத்துக் குலுங்கக் குலுங்க அழுதுகொண் டிருப்பதைக் கண்டாள்.

## 4. ''என் புத்தி பின் புத்தி!''

''அம்மா பவானி, இதோ பாரம்மா! கனவிலும் காண முடியாத கை நிறைஞ்ச பொருளைக் கடவுள் கொடுத்திருக்காரம்மா. லட்சுமிதேவி வலுவிலே வீடு தேடி வந்திருக்கிற அருமை தெரியாமே நீ இப்படி அழுறது கொஞ்சமும் நல்லா இல்லே அம்மா. உன்னுடை நன்மை தீமை அறியாதவளா நான்? நீ மேலுக்கு வர்ரதுக்காக இத்தனை காலமும் அரும்பாடு பெரும்பாடுபட்ட நான் உனக்குக் கெடுதல் நேரும்படி யான காரியத்தை இப்போ செய்வேனா? அழுகையை நிறுத்தம்மா.''

சடக்கென்று தலை நிமிர்ந்தாள் பவானி. நீர் நிறைந்த கண்களால் தாயைப் பார்த்தாள். தாமரை மலர் போன்ற அவள் வதனம் கோபத்தாலும் துக்கத்

தாலும் குப்பென்று சிவந்திருந்தது. கொவ்வைக் கனிபோன்ற மெல்லிய அதரங்கள் படபடவென்று துடித்தன. துயரம் தோய்ந்த குரலில் தாயைப் பார்த்துக் கேட்டாள்.

"வேலியே பயிரை மேய்வதானால் விளைவது எங்கிருந்து அம்மா? இருபது பிராயம் வரை வளர்த்து இப்படிப் பலி கொடுப்பதைவிட நஞ்சுக் கொடியோடேயே என்னை நீ நசுக்கிப் புதைத்திருக்கலாம். இப்பவுந்தான் என்ன? உனக்கு வேண்டியது பணம். கிடைத்து விட்டது. அந்த அளவில் நீ திருப்தி அடைந்து விடலாம். என்னைப் பற்றின கவலை இனி உனக்கு வேண்டாம். என்னை முடித்துக்கொள்ள எனக்கு வழி தெரியும். நீ நிம்மதியாக இருந்தால் அதுவே போதும்

மகளின் பேச்சைக் கேட்டுத் தாய் விதிர் விதிர்த்துப் போனாள். ஆயினும் சமாளித்துக் கொண்டு சொன்னாள்.

"கண்ணே பவானி, என்கிட்டேயா நீ இப்படிப் பேசறே? அருமைத் தாயைப் பார்த்தா இத்தனை பெரிய கேள்விகளைக் கேக்கறே? எனக்குப் பணந் தான் முக்கியம்னு இருந்தா, கடந்த நாலஞ்சு வருஷ காலத்திலே உன் பாடு எவ்வளவோ அவலமாகி இருக்கும் பவானி!"

பவானி இடைமறித்தாள்.

"இப்போது மட்டும் என்னவாம்? கிழட்டு ஜமீன் தாருக்குப் பலியிடப் போகிறாய்!"

"அடி பைத்தியமே! அப்பவே நான் நினைச்சேன். நீ விஷயத்தை சரியா மனசிலே வாங்கிக்

காமெதான் இப்படிப் பேசுறேன்னு. நீ நினைச்சிருக்கிறது தவறு பவானி; ஜமீன்தாரோட மகனுக்கு....''

"போதும், நிறுத்தம்மா! பாவக்காயைப் பூனை தூக்கிக் கொண்டு போச்சுன்னு கேட்கிறவங்களுக்கு மதி எங்கே போச்சு? யாரிடம் இந்தக் கதையெல்லாம்? அழகாம், கலையாம், மூளைக் கோளாறும், அதற்கொரு பரிகாரமாம், அதைப் பவானியின் தலையிலே சுமத்தறதாம்! இந்தக் கற்பனைக் கதையைப் பச்சைக் குழந்தைகூட நம்பாதே அம்மா!''

"ப . . வா . . னி . . !''

"அம்மா!''

"எல்லாமே பொய்யின்னு நீ சொல்றே?''

"சந்தேகம் இல்லாமல்!''

"இந்தப் புத்தி எனக்கு இல்லாமெ போய்ட்டுதே பவானி! அப்பவே உன்னை ஒரு வார்த்தை கேளாமே போனேனே!''

"நான் ஒருத்தி உள்ளே இருப்பதேதான் உனக்கு மறந்து விட்டதே அம்மா? பணம்! அதைக் கண்டதும்தான் நீ உலகத்தையே மறந்து விட்டாயே?''

"சும்மா சும்மா பணம் பணம்னு குத்திக் காட்டிப் பேசாதே பவானி! எம் மனசு துன்பப்படுது. நான் பணத்தைச் சேர்க்கிறதானு அது யாருக்கு? நானு தலையிலே கட்டிகிட்டுப் போகப் போறேன்? எல்லாம் உனக்குத்தானே?''

"அதற்கு இதுதானு வழி?''

"வேணும். ஆழ்ந்து யோசிக்காமெ ஒப்புக்

கொண்டுட்டேன். நாளைக்கு அவங்க வந்ததும் பணத்தைத் திருப்பிக்கொடுத்துடறேன். ஆனால் பவானி...."

"ஆனால்?"

"நீ சொல்ற கருத்து அவங்களுக்கு இருக்குமானா அதுக்கு அவங்க இப்படியெல்லாம் பொய் நாடகம் நடிக்க வேண்டிய அவசியமே இல்லைன்னு தான் எனக்குத் தோணுது. நேரிடையாவேகேட்டிருக்கலாமே?"

"அப்போ நீ என்ன சொல்வாயோ; நான் என்ன சொல்வேனோ என்கிற சந்தேகம் அவங்களுக்குத் தோன்றித்தான் இப்படி ஒரு பொய் நாடகத்தை நடிக்கிறாங்க. நீயும் இம்மாதிரிப் பல சம்பவங்களை நேரிலும் பிறர் மூலமும் அறிந்திருப்பாய்; நானும் கதைகளில் நிரம்பப் படிச்சிருக்கேன்; சினிமாக்களிலும் பார்த்திருக்கேன். காரியதரிசியோடே வந்திருந்தானே கிழவன், அவனுடைய பசிக்குத்தான் இந்த இரை!"

மரகதம் பெருமூச்செறிந்தாள்.

"என் புத்தி எப்பவுமே பின் புத்திதான்!"

"இன்னொன்றும் சொல்றேனம்மா. அப்படியே அவங்க சொல்றது உண்மை என்றே வைத்துக் கொள்வோம். பைத்தியத்தைக் கட்டி மாரடிப்பது என்பது சாமானிய விஷயமா? அதன் தோற்றம் செயல் எல்லாம் எவ்வளவு கொடூரமோ? அது என்னை என்னவெல்லாம் செய்யுமோ! வந்தாங்களே மகானுபாவர்கள், அவங்களுக்கு என்போல் ஒரு பெண் இருந்தா இத்தகைய செயலிலே அவர்கள் அப்

பெண்ணை ஈடுபடுத்துவார்களா? எல்லாம் பணம் இருக்கிற மமதைதானே? யோசித்துப் பாரம்மா."

"சரி பவானி. என் புத்தி தெளிஞ்சுட்டுது. கண்டிப்பா நாளைக்குப் பணத்தைத் திருப்பிடறேன். நீ எழுந்திரு. உடுப்பை மாத்திக்க. சாப்பாட்டை முடிச்சுகிட்டுப் படுக்கலாம்."

தாய் எளிதில் இணங்கினதில் பவானிக்குப் பரம சந்தோஷம். உடனே இருக்கை விட்டு எழுந்தாள். அலுவல்களைக் கவனிக்கலானாள்.

## 5. மனமாற்றம்

இரவு நெடு நேரம் வரையில் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த பவானி அசதியினால் சற்றே கண் மூடினாள். உடனேயே கனவின் அவஸ்தைக்கு உள்ளானாள். கனவின் தன்மை எத்தகையதோ; அவள் நிலை கொள்ளாமல் புரளத் தொடங்கினாள். சிறிது நேரத்தில் அவள் முகம் பல வித பாவங்களைத் தோற்றுவித்தது. புருவங்கள் நெரிந்தன. உதடுகள் துடித்தன. "நல்லது; அப்படியே" என்ற சொற்கள் மெல்ல ஒலித்தன. அந்த அளவில் அவளுடைய முக மாறுதல்கள் மறைந்தன. அழகிய வதனம் அமைதியைத் தோற்றுவித்தது. அவள் புரள்வதும் நின்றது.

சட்டென்று கண் விழித்தாள் பவானி. இரு கைகளாலும் இரு கண்களையும் கசக்கிவிட்டுக் கொண்டு மலங்க மலங்க நாற்புறமும் நோக்கினாள். வேகமாக எழுந்தாள். விளக்கைப் பெரிதாகத் தூண்டினாள். கட

வுள் படத்தின் எதிரே சென்று நின்ருள். கரங் கூப்பி வணங்கிஞள். பிறகு தாய் படுத்திருக்கும் இடத்தை நோக்கி ஓட்டமாக ஓடிஞள். அயர்ந்த நித்திரையில் இருந்த தாயைத் தட்டி எழுப்பிஞள்.

“அம்மா, ஜமீன் பணத்தைத் திருப்ப வேண்டாம் அம்மா. நாம் பெரியநத்தத்திற்குப் போவோம்” என்ருள்.

மரகதம் ஒன்றும் புரியாமல் திரு திருவென்று விழித்தாள். பிறகு நிலவரத்தை ஒருவாறு உணர்ந்து கொண்டாள். மகளின் முகத்தை உற்று நோக்கிஞள். “நடுநிசிக்கு ஏனம்மா திடீர்னு இந்த மாறுதல்?” என்ருள், மகளின் கலேந்த கேசத்தை வருடியபடி.

“கனவிலே அந்தப் பெரியவர் தோன்றிஞரம்மா!”

“அப்படியா?” திறந்த வாய் மூடாமல் மகளின் முகத்தைப் பார்த்தாள் மரகதம். “சரி. போய்ப் படுத்துத் தூங்கு; காலேயிலே பேசிக்கலாம்” என்ருள்.

பவானி தன் படுக்கையை அடைந்தாள்.

சில ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள். அந்திப் பொழுது. அந்தப் பெரியவர் அவர்கள் வீட்டுத் திண்ணேயில் வந்து அமர்ந்தார். தெரு மாடத்திற்கு விளக்கு வைக்க வந்த பவானி முதலில் அவரைப் பார்த்துத் திடுக்கிட்டாள். பிறகு வணங்கிஞள். இதற்குள் மரகதமும் வந்து சேர்ந்தாள். அவர் முகத்திலே வீசிய ஒளி அவள் உள்ளத்தைத் தொட்டது. அப்படியே விழுந்து வணங்கிஞள்.

பெரியவர் அவர்களுக்கு ஆசி கூறினர். பிறகு சில நல்லுரைகளும் புகன்றார். அந்த உரைகளில் பவானியின் வருங்காலம் பற்றிய சில செய்திகளும் பொதிந்திருந்தன.

காலப் போக்கில் பெரியவரின் பொன்மொழிகள் பலித்தன. தாய்க்கும் மகளுக்கும் அவர் நினைவிலே அளவிறந்த பக்தி. அடிக்கடி அவரைப்பற்றிப் பேசிக் கொள்வார்கள்.

சென்ற ஆண்டில் ஒரு நாள். அன்று ஏதோ பண்டிகை. வைகறையிலே எழுந்து குளத்திலே சென்று நீராடிவிட்டு எவர் கண்ணிலும் தென்படாமல் வீட்டிற்குத் திரும்பிய பவானி ஆண்டவன் சந்நிதியில் வணங்கி எழுந்தபோது அந்தப் பெரியவரை அருகே கண்டாள். மண்டியிட்டு வணங்கினாள். "உன்னால் முடிந்தவரையில் உயிர்களுக்கு அன்பு செய்" என்றார் அவர். "நல்லது சுவாமி" என்று பதிலிறுத்த பவானி எழுந்து நின்று பார்த்தபோது பெரியவர் போய்க் கொண்டிருந்தார்.

இப்போது அவள் கனவில் வந்தவரும் அதே பெரியவர்தான். அவர் கூறிய மொழிகளும் முன்னவையேதான். அதனால்தான் அவள் மனம் சட்டென்று மாறிற்று.

"எதிலும் தீர ஆராயாமல் ஒரு முடிவுக்கு வரக் கூடாது; உன் வாழ்நாளில் பிரமிக்கத்தக்க திருப்பங்கள் நேரலாம்; உன் அழகும் கலையும் உன் நலனை விடப் பிறர் நலனுக்குப் பயன்படட்டும்; அதனாலேயே நீ மேன்மை பெறுவாய்; உயிர்களுக்கு அன்பு செய்."

முதற் சந்திப்பில் அவர் கூறியவற்றில் ஒரு பகுதி இது. பவானியின் மனமாற்றத்திற்கு இதுவே காரணம்.

## 6. குழப்பம்

பொழுது விடிந்தது. மரகதமும் பவானியும் எழுந்து காலைக் காரியங்களைக் கவனிப்பதற்குள்ளாகவே அக்கம் பக்கம் உள்ளவர்களெல்லாம் வந்து கூடிவிட்டனர். எல்லாருமே நல்ல எண்ணம் உடையவர்கள் போலத்தான் தோற்றினார்கள்; பேசினார்கள்; நடித்தார்கள். ஆனால் அவர்களில் பெரும்பாலாரின் உள்ளத்திலே பொறாமை கொந்தளித்துக் கொண்டு இருந்தது என்பதுதான் உண்மை.

"நேற்று சாயங்காலம் ஏதோ கார் வந்திருந்ததே, என்ன விஷயம்?"

"வந்தவங்க பெரியநத்தம் ஜமீன்தாராமில்லே? எதுக்கு வந்தாங்க?"

"பாப்பாவுக்குக் கல்யாணம் நிச்சயிக்க இருக்குமோன்னு நான் நினைச்சேன்."

"ஆமாம். பெரியநத்தம் ஜமீன்தார் மவனுக்கு என்னமோ சீக்காமில்லே?"

"சீக்கு ஒண்ணுமில்லேங்கறேன். பைத்தியமில்லே புடிச்சிருக்காம்!"

"ஆமாம். நாலஞ்சு வருஷத்துக்கு முன்னே தாராவரத்திலே என்னமோ நடந்திச்சில்லே? அங்கே என்னமோ தகராரும். அதிலேயிருந்துதான் ஜமீன்தார் மவனுக்கு மூளைக் கோளாரும்!"

"அதெல்லாம் இருக்கட்டுமிங்கறேன். அவங்க நேத்து இந்த வூட்டைத் தேடி வந்த காரணம் என்னுங்கறதுதான் இப்போ கேள்வி."

ஒருவர் தாழ்ந்த குரலில் சொன்னார்:

"ஜமீன்தார் தம்பியோட சம்சாரம் தவறிப்போயி ஏழெட்டு வருஷமாச்சில்லே? அவரு அப்புறம் கல்யாணமே வேண்டாம்னு இருந்துட்டாரு; ஒரு சமயம் இப்போ நம்ம பவானியைக் கட்டிக்கிடலாம்னு ..."

"ஐம்பது வயசுக்கு மேலேயா?"

"அட நீ ஒண்ணு! பணம் படைச்சவங்களுக்கு வயசு ஏதப்பா?"

"அப்படிஇராது. ஜமீன்தார் மகனுக்குப் பைத்தியம் புடிச்சு நாலஞ்சுவருஷமாகியும் தெளியல்லே இல்லே? அதனாலே ஜமீனுக்குச் சரியான வாரிசு இல்லாம போயிடப்படாதேன்னு இப்போ சின்னஜமீன்தாரு கல்யாணங் கட்டிக்க ஒரு வேளை தீர்மானிச்சிருக்கலாம்."

"சரி சரி. ஏன் அவங்கவங்களும் மனசுக்குத் தோணினதே, வாய்க்கு வந்ததெ உளறறீங்க? மரகதம் வந்தா எல்லா விஷயமும் தன்னாலே விளங்கிடுது, போங்களேன்."

மரகதத்தின் வீட்டுத் திண்ணையிலேதான் இவ்வளவு பேச்சும். உள்ளே வளையவந்து கொண்டிருந்த மரகதத்தின் செவிகளில் இவர்கள் பேச்சு ஒருவாறு விழத்தான் செய்தது. அதனாலேயே அவள் நீண்ட நேரமாக வெளியே வராமல் இருந்தாள். அது எவ்வளவு நேரம் முடியும்? 'அப்பப்பா! ஆனாலும் இந்த சங்கரபுரம் வம்புக்காரங்களைப் போலே இந்த உலகத்

திலே வேறே எங்கேயுமே இருக்கமாட்டாங்க!' என்று மனத்திலே வெறுத்துக்கொண்டாள்.

தற்செயலாக முன்னிடைத் தாழ்வாரத்துப் பக்கம் வந்த பவானி திண்ணையிலே நடைபெறும் வம்பிலே ஒரு பகுதியைச் செவியேற்ருள். அவளுக்கு என்றுமே அவர்களையும் அவர்கள் வம்புப் பேச்சையும் பிடிக்காது. இப்போது உள்ளத்திலே பலமான குழப் பம் வேறு. ஆம், இரவு பெரியவரைக் கனவிலே கண்டதும், அவருடைய நல்லுரையைக் கற்பனையில் கேட்டதும் உணர்ச்சிவசமாகி அப்போதைக்கு மனம் மாறித் தாயைத் தட்டி எழுப்பி ஏதோ சொன்ஞளே தவிர, விடிந்ததும் அவள் மனம் மீளவும் குழம்பித் தான் போய்விட்டது. ஒரே பிரமிப்பு!

அங்கிலேயில் தெருத் திண்ணை வம்பு அவளுக்கு நாராசமாய் இருந்தது. பொறுக்கக்கூடிய மட்டில் பொறுத்தாள். பொறுமைக்கும் எல்லே உண்டல்லவா? எழுந்தாள். தெருப்பக்கம் வந்தாள். என்ன பேசு கிறேம் என்பதைக்கூட ஆராயாமல் படபட வென்று வார்த்தைகளேக் கொட்டிஞள்.

"செத்த வீட்டிலே இழவுக்கு வந்து கூடுகிற மாதிரி விடிந்ததும் விடியாததுமாய் இங்கே வந்து கூடி வம்பு பேசி எதுக்கு இப்படிக் கழுத்தை அறுக்க றீங்க?"

அவ்வளவுதான். எல்லோரும் எழுந்துவிட்டார் கள். அதேசமயத்தில் உள்ளேயிருந்து, "பவானி!" என்று மரகதத்தின் குரல் ஒலித்தது.அந்தக்குரல் ஒலி பவானியிடம் சிறிது நிதானத்தைத் தோற்றுவித்தது.

ஆயினும் இனி என்ன பயன்? பொருள் கீழே விழுந்தால் எடுக்கலாம்; வார்த்தையைக் கொட்டிவிட்டால் மீட்க முடியுமா? அவள் வேதனைப்பட்டாள், தன் செயலுக்காக. அதற்கேற்பத் தெரு மனிதர்களும் அவளை ஏளனமாகவும் சுட்டெரித்து விடுகிறாற்போலவும் பார்த்துவிட்டு இகழ்ந்து பேசியபடி செல்லலானார்கள். அந்த இகழ்ச்சி உரைகளில் ஒன்று அவள் நெஞ்சை வாள்கொண்டு அறுத்தது.

"அடடே! நாம் இங்கே வந்தது ரொம்பத் தப்பல்ல? இது மரகதத்தின் மக பவானி இல்லேப்பா; பெரிய நந்தம் சின்ன ஜமீன்தாரிணியாக்கும்!"

அவர்கள் போய்விட்டார்கள். நிலைப்படியிலே நின்றிருந்த பவானியின் தலை கிர்ரென்று சுழன்றது. உள்ளே போகத் திரும்பினவள் நிலைதடுமாறித் தடால் என்று தரையில் விழுந்து மூர்ச்சையானாள்.

சத்தம் கேட்டு உள்ளேயிருந்து ஓடிவந்தாள் மரகதம். மகளின் நிலைகண்டு பதறிப் போனாள். தரையில் அமர்ந்து அவளைத் தூக்கி எடுத்து மடிமீது கிடத்தி ஆசுவாசப் படுத்தலானாள்.

வேர்க்க விறுவிறுக்க வந்துசேர்ந்தார் நட்டுவனார் சிவானந்தம்பிள்ளை. முக்கியமான சேதி ஒன்றைக் கூறப் பரபரப்புடன் வந்த அவர், வீட்டுப்படி ஏறுகிற போதே, "மரகதம்!" என்று குரல் கொடுத்தபடி ஏறினார். நடையில் தென்பட்ட காட்சியைக் கண்டு சிலையாக நின்றார். பிறகு மரகதத்துடன் சேர்ந்து பவானியின் மூர்ச்சையைப் போக்கப் பாடுபட்டார்.

சிறிது நேரத்தில் பவானி தெளிவு பெற்றாள். தாயின் உதவியுடன் உள்ளே சென்று படுக்கையில்

படுத்தாள். மரகதம் சூடாகச் சிறிது காப்பி கொண்டு வந்து தந்தாள். அதைப் பருகிவிட்டு, 'அப்பாடா' என்ருள் பவானி. பிறகு தனக்குக் கேடு எதுவும் இல்லையென்றும் கவலைப்பட வேண்டாம் என்றும் தாய்க்குத் தைரியம் கூறிஞள். "ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும் என்பதை மறந்து..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த மகளைத் தாய் சமாதானம் செய்தாள்.

முன்புறத்து அறையிலே அமர்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார் சிவானந்தம் பிள்ளை. மரகதம் அங்கே சென்றதும் அவர் சொன்ஞர்:

"நான் எல்லா சங்கதிகளையும் விசாரிச்சுட்டேன் மரகதம். தாராவரத்திலே ஒரு பொண்ணு வந்திருந்த தாம். ரொம்ப ரொம்ப அழகான பொண்ணும். அசலே நம்ம பவானி அச்சுத்தாஞம். ரொம்ப நல்லா ஆடிச்சாம். சொர்ணக்குடி சங்கரலிங்க நட்டுவஞரோட சிட்சையாம். அது மெய்யாஞ அந்தப் பொண்ணு ரொம்ப நல்லாத்தான் ஆடியிருக்கணும். அங்கே பரிசு கொடுக்கிறவங்க அந்தப் பொண்ணெ வஞ்சிச்சு வேறெ ஒரு பொண்ணுக்குப் பரிசைக் கொடுத்துட்டாங்களாம் அதுக்காகஇளையஜமீன்தாரு சண்டை புடிச்சாராம். அவரை எளக்காரமா பேசிட்டாங்களாம். அதுதான் அவரு மூளைக் கலக்கத்துக்குக் காரணமாம் மரகதம்."

"இது ரொம்ப வேடிக்கையாய்த்தான் இருக்கு. தென்ன மரத்திலே தேள் கொட்ட, பனமரத்திலே நெறிகட்டினது துங்கிறது இதுக்கு ரொம்பப் பொருத்தம்.

சரி சரி, எது எப்படியோ போவட்டும். நமக்கு ஒரு சங்காத்தியமும் வாணும்.”

“நீ என்ன சொல்றே மரகதம்?”

“அந்திப் போதுக்கு அவங்க வந்தா வாங்கின தொகையைத் திருப்பிடப் போறேன்.”

“பைத்தியந்தான் உனக்கு!”

“பின்னே என்ன அண்ணே? அவங்க வந்து போனது முதல் தங்கச்சிக்கு நல்ல இருப்பே இல்லே அண்ணே!”— அவள் தொண்டை துயரத்தால் அடைத்தது.

“அவசரப்பட்டு எதுவும் செய்யாதே. பணம் கொஞ்ச நஞ்சம் இல்லே! ஆமாம்!”

“ஏதோ பார்க்கலாம். ஆனா, நீ இப்போ ஏதேதோ சொன்னியே; அதையெல்லாம் உன் மன சோடே வச்சிக்க. தங்கச்சி காதிலே போட்டுடாதே. அதன் மூளை இன்னும் கலங்கிப் போயிடும்” என்று கூறிப் பெருமூச்செறிந்தாள் மரகதம்.

## 7. அரண்மனையில் ஆரணங்கு

நீண்ட நேரத்திற்குப் பின் எழுந்து வெளியே வந்த பவானி சோர்வான நிலையிலேயே குளித்து, சிறிது உண்டு, மீளவும் படுக்கையை அடைந்தாள். தாய் அவளிடம் பேசி அலட்டவில்லை.

மாலை நாலு மணிக்குக் கார் வந்தபோது பவானி தயாராகவே இருந்தாள் பயணத்திற்கு. ஆனால் ......

பகைக்கு அஞ்சிப் பறந்தோடும் பறவையின் இறகுகளைப்போல் அவள் உள்ளம் படபடத்துக்

கொண்டிருந்தது. பக்கத்தில் அமர்ந்திருந்த தாயின் கரத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டாள். கார் காற்றினும் கடிதாகப் பறந்தது.

"அதோ தெரிகிறதே, அதுதான் ஜமீன் மாளிகை" என்று தொலைவில் தெரிந்த கட்டிடத்தைச் சுட்டிக் காட்டினார் சுந்தரமூர்த்தி. பவானி அந்தக் கட்டிடத்தைப் பார்த்துவிட்டுக் கண்ணை இறுக மூடிக் கொண்டாள். மரகதம் ஊடுருவி நோக்கினாள்.

இரு நூற்றாண்டுகளுக்கு முன் எழுப்பப் பெற்ற கர்நாடக பாணியில் அமைந்த கட்டிடம் அது. அண்மையில் பழுது பார்த்துப் பூச்சு வேலை செய்து வண்ணம் தீட்டப் பெற்றிருந்தும் முன்புறத் தோற்றத்தில் ஏனோ களை சிறிதும் இல்லை. களை இல்லாதது மட்டுமா? உருப் புரியாத ஒரு பயங்கரத் தோற்றம் அங்கே நிலவியிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். பவானி கண்ணை மூடிக் கொண்டதற்கு அதுதான் காரணமோ?

சில நிமிஷங்களில் கார் அந்த மாளிகையின் முன் சென்று நின்றது. எல்லோரும் இறங்கினார்கள். டிரைவர் காரை அப்பால் கொண்டு சென்றான்.

நில மட்டத்திலிருந்து சுமார் பதினைந்து அடி உயரத்தில் இருந்த மாளிகையின் படிக்கட்டுகளில் சுந்தரமூர்த்தி முன்னே செல்ல, மரகதமும் பவானியும் அவரைத் தொடர்ந்து பின்னே சென்றார்கள்.

பவானிக்குக் கால்கள் துவண்டன; கண்கள் இருண்டன; மெய் சோர்ந்தது; நெஞ்சு உலர்ந்தது. ஒவ்வொரு படியை ஏறிக் கடக்கும்போதும் அவள்

.ள்ளம் எமனின் ஆலயத்தை அணுகுவதுபோன்ற ருவிதப் பீதி உணர்வினால் துடித்துத் தவித்தபடி ிருந்தது. தாயின் கரத்தை அவள் கை மேலும் மலும் இறுகப் பற்றிற்று. உடம்பெல்லாம் வேர்வை. ூச்சுத் தங்கித் தங்கி வெளி வந்தது.

படிக்கட்டுகளில் பாதியைக் கடக்கும் தறுவாயில் திடீரென்று நின்றாள் பவானி. தாயின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருந்தது. பார்வை பரிதாபமாக இருந்தது. வீறிடும் குரலில், "அம்மா!" என்றாள். மறுகணத்தில் தன் மென் கரங்களால் தாயின் இடையைச் சுற்றிக் கொண்டு அப்படியே அவள்மீது சாய்ந்தாள். உடல் வெட வெடவென்று நடுங்கிற்று.

மகளின் நிலைகண்டு தாயின் உள்ளம் தடு மாறிற்று. ஒரு கையால் மகளை அணைந்து, மற்றொரு கையால் அவள் தலையை வருடினாள். ஏதோ சொல்ல வாயெடுத்தாள். உதடுகள் துடித்தன. அப்போது காரியதரிசி சொன்னார்.

"அம்மா, நீங்கள் பயப்படுகிற அளவுக்கு அங்கே ஒன்றும் இல்லை அம்மா. இப்பொழுதும் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. வாருங்கள்; வந்து அவ் விடத்து நிலையைப் பாருங்கள்;மனசுக்குச் சமாதானம் இருந்தால் மேற்கொண்டு செயலில் ஈடுபடலாம். இல் லாவிட்டால்திரும்பிவிடலாம். கட்டாயம் ஏதும்இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. பெரிய ஜமீன்தாரின் பரிதாப நிலையைக் கண்டால் கண்டிப்பாக உங்கள் மனசு இளகும்; இளைய ஜமீன்தாரின் கேவலமான நிலையைப் பார்த்தால் பவானியின் உள்ளம் உருகும்."

அவர் பேச்சை முடிக்கு முன்பே பவானி தெளிவு பெற்று மெல்ல நடக்க ஆரம்பித்தாள். அப்போது அவள் செவிகளில், 'உன்னால் முடிந்தவரையில் உயிர்களுக்கு அன்பு செய்' என்ற சொற்கள் ஒலித்தன.

படிக்கட்டுகளைக் கடந்து மேலே சென்று ஹாலை அடைந்த அவர்கள், சுந்தரமூர்த்தியைப் பின் தொடர்ந்து மாளிகையின் பல பாகங்களைக் கடந்து சென்றனர்.

விஸ்தாரமான ஓர் அறையிலே சின்ன ஜமீன்தார் உலவிக் கொண்டிருந்தார். அசப்பிலே சுந்தரமூர்த்தியைப் பார்த்த அவர் ஆவல் ததும்பிய குரலில், "எங்கே? வந்துவிட்டார்களா?" என்றார். பிறகே பின்னால் வந்து கொண்டிருந்த மரகதத்தையும் பவானியையும் பார்த்தார். உடனே முகத்திலே கனிவு தோன்றக் கரங்கூப்பி, "வாருங்கள், வாருங்கள்; உங்கள் வரவு நல்வரவாகட்டும். உங்கள் அன்பால் எங்கள் கலி தீரட்டும்!" என்று முகமன் கூறி வரவேற்றார்.

மரகதமும் பவானியும் அவருக்கு வணக்கம் செலுத்தினார்கள். சுந்தரமூர்த்தி அவர்களைக் கூட்டிக் கொண்டு மேலும் நடந்தார் சிறிதுதூரம் சென்றதும் மாளிகையின் உட்புறத்தில் உள்ள பூங்காவை அவர்கள் அடைந்தார்கள். நடுவே அழகிய சின்னஞ் சிறு தடாகம்; சுற்றிலும் மரங்களும் செடி கொடிகளும்; அங்கங்கே சிமிண்டினாலும் பளிங்கினாலும் ஆன ஆசனங்கள்; பெரிய அரண்மனைபோல் இருந்தது அந்த இடம்.

நந்தவனத்தின் ஒருகோடியில் சின்னஞ்சிறு விடுதி ஒன்று இருந்தது. சுந்தரமூர்த்தி மரகதத்தையும் பவானியையும் அங்கே இட்டுச் சென்றார். குளியல் அறை, சமையல் அறை, படுக்கை அறை முதலிய எல்லா வசதிகளும் அந்த விடுதியில் இருந்தன. ஏவின பணிகளைச் செய்து முடிக்க விடுதி வாயிலின் இரு மருங்கிலும் ஆண் - பெண் பணியாளர்கள் காத்திருந்தனர். தேவையான பொருள்கள் எல்லாம் அங்கே நிரம்பியிருந்தன சுந்தரமூர்த்தி மரகதத்திடம் சொன்னார்:

"இருட்டிவிட்டது. பெரிய ஜமீன்தாரையும் இளைய ஜமீன்தாரையும் நீங்கள் காலையிலே பார்த்துக் கொள்ளலாம். உங்களுக்கென்று ஒதுக்கப்பெற்றிருக்கும் விடுதி இதுதான். இங்கே உங்களுக்கு ஒரு குறைவும் இல்லை. நீங்கள் விரும்பினால் உரிய நேரத்திலே அரண்மனை உணவையே உட்கொள்ளலாம். அதில் விருப்பமில்லையெனில் சமையல் செய்ய ஆட்கள் இருக்கிறார்கள்; பொருள்கள் இருக்கின்றன; நீங்களே உணவு தயாரித்துக் கொள்ளலாம் இரவு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். காலையில் வந்து பார்க்கிறேன்."

"இப்போதைக்கு அரண்மனைச் சாப்பாட்டையே அனுப்பி வையுங்கள். அவசியமானால் பின்னாலே மாறுதல் செய்துக்கலாம்" என்றாள் மரகதம்.

அவர் விடைபெற்றுச் சென்றார்.

## 8. ஜமீன்தாரிணி

தாயும் மகளும் விடுதியின் உட்புறம் சென்று கூடத்திலே கிடந்த சோபாக்களில் அமர்ந்தனர்.

இருவர் முகத்திலும் தெளிவே சிறிதும் இல்லை. ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளவும் இல்லை. இருவர் பார்வையும் ஜன்னலுக்கப்பால் சென்று அரண்மனைக்கு வெளியே மரகதப் படுதா விரித்தாற் போன்று பரந்து கிடந்த நெற்பயிர்ப் பரப்பின் மீது பதிந்திருந்தது.

"அம்மா!"

மரகதம் திரும்பிப் பார்த்தாள். பெண்கள் இருவர், கைகளில் சிற்றுண்டி, பான வகைகளுடன் நின்றிருந்தனர். மரகதம் சாடை செய்ய அவர்கள் அவற்றை ஒருபுறமாக வைத்துவிட்டுச் சென்றனர்.

"அம்மா!"

"என்ன பவானி?"

"நெஞ்சு திக் திக்கென்று அடித்துக் கொள்கிறதம்மா! பயமாக இருக்கிறது."

"பவானி, துணிஞ்சு வந்துட்டோம். இனிமே பயந்து குழம்பறதிலே பலன் என்ன? காரியதரிசிதான் சொன்னாரே, கட்டாயம் எதுவும் இல்லேன்னு! நாளைக்கே வேணுமானாலும் நமக்கு இங்கேருந்து விடுதலை கிடைச்சுடும். அதை நீ நினைவிலே வைச்சுக்க."

"எனக்கு அதிலே நம்பிக்கை பிறக்கவில்லை அம்மா!"

"எதிலே நம்பிக்கை பிறக்கல்லே?"

"நாம் விடுதலை பெற முடியும் என்பதிலே.'

"ஏன் அப்படிச் சொல்றே?"

"இதில் ஏதோ சூது இருக்கிறதென்றுதான் தோன்றுகிறது. எல்லாமே ஒரு போலி நாடகமோ என்று எண்ணுகிறேன்."

"உன்னோட பயம் எனக்குப் புரியுது பவானி. ஆனா எனக்கு அந்தப் பயம் கொஞ்சங்கூட இல்லே. சின்ன ஜமீன்தார் உன்னைத் தவறான முறையிலே நடத்த நினைச்சா அதுக்கு இந்தமாதிரி ஒரு நாடகம் தேவையே இல்லேன்னுதான் முன்னேயே சொன்னேனே? அவங்களோட செல்வாக்கைப்பத்தி உனக்குத் தெரியாது; எனக்கு நல்லாத் தெரியும். கவலையை விடு."

"எல்லாமே உண்மைதான் என்றாலும் என் மனம் மிகவும் துன்பப் படுகிறது அம்மா."

மரகதத்தின் முகம் கடுத்தது. சொற்கள் சூடாக வெளி வந்தன.

"இந்தப் புத்தி அப்பவே இருக்கணும்! முதல்லே மறுத்தவ அப்புறம் ஏன் சம்மதிச்சே? உன்னோட மறுப்பை ஆதாரமாக்கிக்கிட்டு வாங்கின பணத்தைத் திருப்பிக் கொடுக்க இருந்த என்னையும் நீயே தடுத்தே! இப்போ இப்படிக் குழம்பித் தவிச்சா என்ன செய்யறது?"

தாயின் சூடான மொழிகள் மகளின் நெஞ்சைக் கிள்ளி விட்டன. அங்கே தோன்றிய ரத்தம் கண்கள் வழியே நீராக வெளிப்பட்டது. அவள் சோபாவின் விளிம்பிலே தலையைச் சாய்த்துக் குமுறிக் குமுறி அழத் தொடங்கினாள்.

"அம்மா!" என்றது ஒரு குரல்.

"யாரங்கே?"

"ஜமீன்தாரிணி அம்மா வந்திருக்காங்க"

மரகதம் சட்டென்று இருக்கையை விட்டு எழுந்தாள். அதற்குள் ஜமீன்தாரிணி கனகாம்புஜம் கூப்பிய கரத்துடன் கூடத்தில் பிரவேசித்தாள். மரகதம் மிகவும் மரியாதையுடன் வணக்கம் செலுத்தி அந்த அம்மாளை வரவேற்றுச் சோபாவிலே அமரச் செய்துவிட்டு, பவானியை நோக்கி, "பவானி, இதோ பாரம்மா, தவமிருந்து பேட்டி காணவேண்டிய ஜமீன்தாரிணி அம்மா நாம் இருக்கிற இடம் தேடி வந்திருக்காங்க!" என்றாள்.

பவானி சட்டென்று சுதாரித்துக் கொண்டு சோபாவை விட்டு எழுந்தாள். முன்றானையால் லாகவமாகக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். பலவந்தமாக முறுவலை வரவழைத்துக் கொண்டாள். ஜமீன்தாரிணி அம்மாளைச் சமீபித்து வணங்கி நின்றாள்.

ஒரு நிமிஷ காலம் ஒருவரை ஒருவர் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டனர். 'வயசான காலத்திலேயே இந்த அம்மாள் இத்தனை சௌந்தரியத்தோடு விளங்குகிறார்களே, இவர்களுடைய பிள்ளை - காளைப் பருவத்தினர் - எவ்வளவு ரூபவானாக இருக்க வேண்டும்? காரியதரிசி சொன்னது மெய்தான் போலும்! ஐயோ! அத்தகைய சுந்தர ரூபனுக்குப் புத்தி மாறாட்டமா?'—இப்படி ஓடிற்று பவானியின் சிந்தனை.

'அழகு என்பது இவளிடமிருந்துதான் எல்லோருக்கும் பிச்சையாகக் கிடைக்க வேண்டும். பெண்ணாகிய நானே இப்படிச் சொக்குகிறபோது ஆண் மகன் மயங்கக் கேட்பானேன்? இசை, நடனம் முதலியவற்றிலும் மிகத் தேர்ந்தவள் என்றும் சுந்தரமூர்த்தி சொன்னார். ஆகவே இவள் மூலம் என் குடி விளங்கும்

என்பதில் சந்தேகம் இல்லை!' என்று எண்ணமிட்டாள் ஜமீன்தாரிணி.

"உட்காரம்மா. ஏன் நிற்கிறாய்? நீங்களும் உட்கார்ந்து கொள்ளுங்கள் அம்மா."

தாயும் மகளும் தரையில் கடந்த விரிப்பின்மீது அடக்கமாக அமர்ந்து கொண்டார்கள். அதைக் கண்ட கனகாம்புஜம் தானும் எழுந்து கீழே உட்கார்ந்து கொண்டாள். அப்போது பவானியின் முகத்தை ஊன்றிக் கவனித்த அவள், ஆர்வமும் சோகமும் கலந்த குரலில், "நீ என்மகனைப் பார்த்தாயா அம்மா?" என்று வினவினாள்.

பவானி திகைப்புடன், "இல்லையே!" என்றாள்.

"பின்னே உன் கண்களில் நீர்க் கறை படிந்திருக்கிறதே?"

"அப்படியானால்? உங்கள் மகனைப் பார்த்தால் கண்ணீர் சிந்...."

"ஆம் அம்மா. கண்ணீர் சிந்தாமல் இருக்க யாராலுமே முடியாது. அவனுடைய அழகும், அறிவும், ஆற்றலும்;இன்று அவன் இருக்கும் கோலமும்...."

கனகாம்புஜத்தால் தொடர்ந்து பேச முடியவில்லை. விசித்து விசித்து அழுதாள்.

"வருத்தப்படாதீங்க அம்மா. நல்லவங்களைக் கடவுள் அதிகம் சோதிக்கமாட்டார்" என்று ஆறுதல் சொன்னாள் மரகதம்.

"எதனால் திடீரென்று இப்படி ஆயிற்று?" என்று கேட்டாள் பவானி.

கனகாம்புஜம் கண்களைத் துடைத்துக் கொண்டு பவானியை நிமிர்ந்து பார்த்தாள். "உனக்கு விவரம்

ஒன்றுமே தெரியாதா? எங்கள் காரியதரிசி எல்லாம் சொன்னதாகத் தெரிவித்தாரே?" என்றாள்.

"அம்மாவிடம் சொன்னாராம். அதை அம்மா என்னிடம் சொன்ன போது நான் செவி கொடுத்துக் கேட்கவில்லை. மேலும் உங்களிடமிருந்து நேரில் தெரிந்து கொள்வதில் நலன் இருக்கும் என்கிற எண்ணமும் கூட. அதனால்தான் கேட்டேன்" என்றாள் பவானி, நிதானமான குரலில்.

அதே சமயத்தில் பணியாளர்கள் மரகதம், பவானி இருவருக்கும் உரிய இரவு உணவுடன் அங்கே வந்தனர். பவானி கல கல வென்று சிரித்தாள்.

"எதற்காக அம்மா சிரிக்கிறாய்?"

"சிற்றுண்டியும் பானமும் சீண்டுவாரற்றுக் கிடக்கிறபோதே இரவுக்குரிய சாப்பாடும் வந்து விட்டதே என்றுதான் சிரித்தேன்."

"தவறு அம்மா. எது எப்படியானாலும் உடலையும் உள்ளத்தையும் வாடவிடக் கூடாது. நானும் இப்போது இங்கேயே உங்களுடன் உணவு கொள்கிறேன். வாருங்கள் சாப்பிடலாம்."

மரகதமோ பவானியோ மறுக்க வகையின்றி ஜமீன்தாரிணியே இலைமுன் அமர்ந்ததும் அவர்களும் கூடவே அமர்ந்தார்கள். இருவர் உணவை மூவர் பகிர்ந்து கொண்டனர்.

சாப்பாடு முடிந்தது. அனைவரும் சோபாக்களில் அமர்ந்து தாம்பூலம் தரித்துக்கொண்டார்கள். அப்போது ஜமீன்தாரிணி தன் மகனின் சோக சரிதையை உருக்கமாகச் சொல்லத் தொடங்கினாள்.

கதை முடிய வெகு நேரமாயிற்று. அதன் பின் ஜமீன்தாரிணி விடைபெற்றுப் படுக்கச் சென்றாள்.

## 9 கண்டதும் கேட்டதும்

**வி**டிகிற நேரம் ஏதோ ஓர் உணர்வினால் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் பவானி. எங்கோ யாரோ பாடுவது போல் உணர்ந்தாள். உடனே படுக்கையை விட்டு எழுந்தாள். அச்சத்தால் உடல் வெட வெடத்தது. தாயை எழுப்ப நினைத்து அவள் படுக்கையைச் சமீபித்தாள். "அம்மா" என்று கூப்பிட்டுக் கொண்டே அவள் தோள் மீது கை வைத்த போது...

அந்த மதுரமான குரல் அவள் செயலைத் தடுத்து நிறுத்திற்று. மெல்லப் பின்னுக்கு வந்தாள்.

பலகணி வழியே நந்தவனத்திலே பார்வையைச் செலுத்தினாள்.

முதலில் ஒன்றும் புலனாகவில்லை. நேரம் செல்லச் செல்லக் குளக்கரையில் ஓர் உருவம் உட்கார்ந்திருந்தது தென்பட்டது. பாடுவது அவ்வுருவந்தான் என்பதும் தெளிவாயிற்று. இசையின் உயர்வு அவள் உள்ளத்தைக் கவர்ந்தது. அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளி வராந்தாவுக்கு வந்தாள். கரங்களால் கம்பிகளைப் பற்றி நின்றபடி இசையைக் கேட்டாள். 'ஆகா! ஆகா! என்ன சாரீரம்!' என்று வியந்து கொண்டாள். அப்போது மணி என்ன இருக்கும் என்று அவளால் தீர்மானிக்க முடியவில்லை. விடியும் தருணமோ?

'எது இன்பம்? எது அழகு? எது உண்மைக் கலை?' என்ற பாட்டின் முதலடி தெளிவாகச் செவியில்

விழுந்ததும், 'சந்தேகம் இல்லாமல், பாடுவது கோபாலன் தான்' என்ற முடிவுக்கு வந்தாள் பவானி. அந்த முடிவு அவளை உணர்ச்சி வசமாக்கி உலுக்கி எடுத்தது.

'பசி, தாகம், தூக்கம் இல்லாமல காலமெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கலாம் போல் இருக்கிறதே, மதுரமான இந்த கானத்தை!'

பார்த்துக் கொண்டிருக்கிற போதே நிலம் தெளியத் தொடங்கிற்று குளக்கரையில் உட்கார்ந்திருந்த உருவத்திடம் சலனம் தென்பட்டது. எழுந்து மெல்ல நடப்பது தெரிந்தது. நந்தவனத்தின் மற்றொரு கோடியில் ஒரு சிறு விடுதி. அந்த உருவம் அந்த விடுதியை நோக்கிச் சென்றது.

'ஆம். அந்தக் காரியதரிசி அப்படித்தானே சொன்னார்? 'நந்த வனத்தின் ஒரு கோடியில் சிறு விடுதி ஒன்று இருக்கிறது. அவன் அங்கேயேதான் தன் காலத்தைக் கழித்து வருகிறான். அவனுக்கு உவந்த பொருள்கள் பல அங்கே இருக்கின்றன' என்று சொன்னாரே? சந்தேகமே இல்லாமல் இவர் கோபாலன்தான். வாட்ட சாட்டமான தோற்றம்! ஆனால் நிதானத்தை மீறி இளைத்திருக்கிறாற் போல் தோன்றுகிறது; பாவம்!....'

பவானி சிந்தித்துக் கொண்டிருக்கிற போதே திடீரென்று ஓர் அவலக் குரல் கேட்டது. கணத்தில் அவள் மருண்டு போனாள். அந்தக் குரல் வெறும் குரலாக இருந்தால்கூடச் சகித்துக் கொள்ளலாம் போல் இருந்தது. ஆனால் அது அவ்வாறு இல்லாமல் அபஸ்வரமான இசையின் ஓலமாக இருந்தது

அப்பப்பா! என்ன கடூரம்! பவானி காதுகளை இறுக மூடிக்கொண்டாள் அப்படி அபஸ்வரமாக ஓலமிட்டதும் கோபாலனேதான் என்று உணர்ந்ததும்தான் அவள் அச்சமும் துக்கமும் அதிகமாயின. அவள் அந்த அச்சத்திலிருந்தும் துக்கத்திலிருந்தும் சமாளித்துக் கொள்வதற்குள் அவளை அடுத்த கட்டம் முற்றுகை யிட்டது. மெதுவாக நடந்து போய்க்கொண்டிருந்த கோபாலன் திடீரென்று நின்றான். கோடையிடி போல் சிரித்தான். கட கட கட வென்று தங்கு தடையின்றிச் சிரித்தான். அந்தப் பேய்ச் சிரிப்பின் இடையே, "எது அழகு? எது உயிரோவியம்? எது சுஸ்வரமான சங்கீதம்? எங்கே இருக்கிறது உண்மைக் கலை? சொல்! சொல்! சொல்!" என்று கர்ஜித்தான். கர்ஜித்து விட்டு மீண்டும் முன் போல் கோரமாகச் சிரித்தான். சிரித்துக் கொண்டே மெல்ல நடந்தான்.

'ஐயோ கடவுளே! இது என்ன அநியாயம்! அழகைக் கொடுத்தாய், அறிவைக் கொடுத்தாய், ஆற்றலைக் கொடுத்தாய், ஐசுவரியத்தைக் கொடுத்தாய்; அனைத்தையும் தாராளமாகக் கொடுத்துவிட்டு மதியைக் கெடுத்து விட்டாயே! கருணை மூர்த்தியாகிய நீ இப்படிச் செய்யலாமா?' என்று மனத்துள் புலம்பினாள் பவானி அவளுக்கு அழுகை குமுறிக்கொண்டு வந்தது

'உன்னால் முடிந்த வரையில் உயிர்களுக்கு அன்பு செய். அதுவே ஆண்டவனுக்கு உவந்தது.'

'ஆம். செய்வேன்! என் உயிரை அர்ப்பணம் செய்தேனும் இவருக்கு நன்மை தேடுவேன்!'

அவன் சென்ற திசையிலே அவளும் நடந்தாள். அச்சம் பின்னுக்கு இழுக்கவே சிறிது தூரம் சென்று திரும்பி விட்டாள்.

பொழுது புலர்ந்தது. காரியதரிசி சுந்தரமூர்த்தி விடுதிக்கு வந்தார். மரகதத்தையும் பவானியையும் கண்டு பேசினார். பவானி இனி நடந்துகொள்ள வேண்டிய முறைகளை - மனத்தத்துவ வைத்திய நிபுணர் அறிவித்த முறைகளை - விவரித்தார். பிறகு விடை பெற்றுச் சென்றார்.

பவானி தன்னைத் தயார் செய்துகொண்டாள். நேற்று வரையில் அவளைப் பிறர் தயார் செய்ய முயன்றனர்; இன்றோ அவள் முழுமனத்தோடு, கன உற்சாகத்தோடு, தன்னைத் தயார் செய்துகொண்டாள். அவள் உள்ளத்தில் இனம் புரியாத ஒரு குதூகலம் நிறைந்து துளும்பிக்கொண்டிருந்தது. அந்த உற்சாகத்தின் விளைவாக அவள் தன்னை அலங்கரித்துக்கொள்ளும் செயலில் அதிக நேரத்தைச் செலவிட்டாள். அளவு கடந்த அக்கறையை மேற்கொண்டாள். அன்றளவும் கண்டறியாத அதி நூதன முறையில் அமைந்தது அவளுடைய விசேஷ அலங்காரம். 'முதல் அபிப்பிராயத்தில் வெற்றி கிட்டினால் முழுக் காரியமும் வெற்றி பெறும்' என்ற நம்பிக்கை, என்றும், எதிலும் அவளுக்கு உண்டு. ஆகவேதான் அவள் கோபாலனின் முதல் அபிப்பிராயத்தைப் பெற அத்தனை முயற்சியை மேற்கொண்டாள். அவள் பொறுப்புணர்ச்சியைக் கண்டு மரகதமேபிரமித்தாள் வியந்தாள்; பெருமூச்செறிந்தாள்.

அலங்காரம் ஒரு வகையாக முடிவு பெற்றது. கடைசியாக ஒரு முறை நிலைக் கண்ணாடி முன் நின்று தன் பிம்பத்தின்மீது கண்ணோட்டம்விட்டாள் பவானி. மனத்திருப்தி ஏற்பட்டது. தன்னைத்தானே மோகிக்கும் நிலையில் தன் பிம்பத்தை நோக்கி முறுவல் பூத்தாள். 'பவானி! உனக்கு வெற்றிதான்!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் அப்படியே கரகர வென்று சுழன்றாள். கண்டம் இனிமையாக ஒரு வர்ண மெட்டை இசைத்தது. அவள் ஆடினாள். ஆடிக் கொண்டே அங்கிருந்து ஹாலுக்கு வந்தாள். அதைக் கடந்து வராந்தாவுக்கு வந்தாள். "அம்மா, நான் போய் வருகிறேன் அம்மா" என்று கிள்ளை மொழியில் நவின்றாள். தாய் பார்த்துக் கொண்டிருக் கிறபோதே கன ஒய்யாரமாக நடந்தாள். அவள் நடையிலே தாளம் அணுப் பிசகாமல் அமைந்து கொண்டிருந்தது. அவள் கோபாலனின் விடுதியை நோக்கி விரைந்தாள்.

## 10. மந்திரம் கற்றவளோ!

கோபாலனின் விடுதியில், வாயிற்புறத்தில், வழக் கம்போல் பணிப் பெண்கள் காத்திருந்தனர். பற் பொடி, வெந்நீர், குளிர்ந்த நீர், துவாலை, மற்றும் பலகார வகைகள், பான வகைகள், பழ வகைகள் இப்படிப் பல பொருள்களைத் தாங்கி நின்றிருந்தனர்.

கோபாலன் அநேகமாக அதிகாலையிலேயே எழுந்து விடுவான். ஆனால் உடனேயே காலைக் கடன் களில் ஈடுபட்டு விடுவான் என்று சொல்ல முடியாது. அவன்தான் முழுப் பைத்தியம் இல்லையே? எப்போதும்

கோளாருன முறையில் நடந்து கொள்பவனும் இல்லையே! கலை சம்பந்தப்பட்ட நினைவலைகள் அவனைத் தாக்குகிறபோது மட்டும்தான் அவன் நிலை மாறுவான். ஏனைப் போழ்தெல்லாம் நல்ல நிலையில் உள்ளவனுகவேதான் காணப்பெறுவான். ஆயினும், ஒருநாளில் ஒருபொழுது அவன் மனநிலை கலங்கினுல் அன்று முழுவதுமே அவனுடைய போக்கு மந்த கதியிலேதான் இருக்கும். சில நாளில் காலையில் எழுந்ததும் வெளியே வந்து பணியாளரின் பணி விடைகளை ஏற்றுப் பல் துலக்கி முகங் கழுவிச் சிற் றுண்டி அருந்துவான். சில சமயம் நீண்ட நேரம் படுக்கையிலேயே கிடப்பான் வேறு சில நாளில் சுறுசுறுப்பாக எழுந்து காலைக் கடன்களை மறந்து ஆடல் பாடல்களிலும் சிரிப்பு, பேச்சு முதலியவற்றி லும் ஈடுபட்டு விடுவான்.

அன்றும் அப்படித்தான். முன்னுள் இரவின் இசை முதலிய நினைவின் பயனுகக் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததுமே ஆட்டத்திலும், பாட்டிலும் ஈடு பட்டுவிட்டான். அப்போதுதான் பவானி அவன் விடுதிக்கு வந்தாள் வந்தவள் விடுதியின் தலைவாச லில் நின்ற பணிப்பெண்களைக் கடந்து உள்ளே சென்ருள். விவரம் அறிந்திருந்த பணிப் பெண்கள் அவளுக்கு வணக்கஞ் செலுத்தி மரியாதையாக ஒதுங்கி வழிவிட்டனர்.

பவானி கோபாலனின் விடுதியில் பிரவேசித்த தும் மரகதமும் சுந்தரமூர்த்தியும் மறைவான இடத் திலே இருந்து கண்காணிக்க வேண்டியது; கோபால ஞல் பவானிக்கு விபத்து ஏதாவது நேரும்போல்

இருந்தால் அவர்கள் குறுக்கிட்டுப் பாதுகாக்க வேண்டியது— என்று அவர்கள் திட்டம். அதன் படியே மரகதமும் சுந்தரமூர்த்தியும் கோபாலனின் விடுதிக்கு எதிரே தலைமறைவாக அமர்ந்திருந்தனர்.

கோபாலன் பெரிய நிலைக் கண்ணாடிக்கு எதிரே நின்று சிவசக்தி நடனத்தில் ஓர் இடத்திற்கு அபிநயம் பிடித்துக்கொண்டிருந்தான். அப்போது கண்ணாடிக்குள் அவன் பிம்பத்தின் அருகே பெண் உருவம் ஒன்றைக் கண்டான். அந்த உருவம் வெறு மனே இராமல் சிவசக்தி நடனத்தில் அவன் பிடித்துக் கொண்டிருந்த அபிநயத்திற்கு ஏற்ற அபி நயத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருந்தது. கோபாலன் பிரமித்தான். உருவத்தின் சௌந்தரியம், அவயவங்களின் அமைப்பு, முக பாவம், கண் ஒளி, முத்திரையின் லாகவம், அதரங்களின் எழில், புருவங் களின் நெளிவு ஆகியவை அவன் உள்ளத்தை எல்லையற்ற வியப்புக்கு உள்ளாக்கின.

"கலாவதி!...."

இவ்வாறு கூவிக்கொண்டே இந்தப் பக்கம் திரும்பிய கோபாலன் பின்புறத்தில் பவானியைக் கண்டதும் முகமும் அகமும் ஆனந்தத்தால் மலர, "கலாவதி!... கலாவதி!" என்று கூவிய வண்ணம் கைகளை அவள் பக்கமாக நீட்டிக் கொண்டு அவளை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான்.

பவானி கரங்கூப்பி அவனுக்கு அஞ்சலி செய் தாள். எதிரெதிராக வெகு அருகே அவன் முகத்தைப் பார்த்தாள். 'அங்கே மண்டிக் கிடக்கும் தாடி மீசை முதலியவற்றைக் களைந்தால் அந்த முகம் எத்தனை

லாவண்யத்துடன் விளங்கும்! மேதையைத் தோற்று விக்கும் அகன்ற நெற்றியும் நீண்ட நாசியுந்தான் அம் முகத்திற்கு எத்தனை பொருத்தம்! அந்தக் கண்களிலேதான் எவ்வளவு காந்தி!....'

கோபாலனும் அவளை அதேபோலத்தான் பார்த் துக்கொண்டிருந்தான். சரியாக ஒரு நிமிஷ நேரம் நான்கு கண்களும் கலந்து நின்றன. பிறகு அவ னுடைய இதழ்கள் மலர்ந்தன. அவளும் லேசாக முறு வலித்தாள். பின்னர் அவன் வாய்விட்டுச் சிரித்தான். சில சமயங்களில் அண்டமே அதிரும்படிச் சிரிக்கும் பேய்ச் சிரிப்பு அல்ல; சுருதியுடன் இழைந்த இனிய நாதம் நிறைந்த வெண்கலச் சிரிப்பு. பவானியும் பின் வாங்கவில்லை. வெண்முத்துப் பல்வரிசை தெரியக் கிண்கிணிச் சிரிப்பால் அவனை ஒன்றினாள்.

இருவரும் சிரித்து ஓய்ந்ததும் அவன் அவளை நோக்கி மேலும் சிறிது முன்னேறிக் கனிவான குரலில், "கலாவதி!...." என்றான். பவானியும் பதிலுக்கு அதே குழைவான குரலில், "கோபால்!" என்றாள். மரகதமும் சுந்தரமூர்த்தியும் பிரமித்தனர்.

"என்னை நீ மன்னிக்க வேண்டும், கலாவதி."

"எதற்குக் கோபால் மன்னிப்பு?"

"தாராபுரத்திலிருந்து உன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் வந்துவிட்டதற்குத்தான்."

"அதனால் என்ன கோபால்? அப்போது உங்கள் மனம் இருந்த நிலையில் நீங்கள் எதைச் சிந்தித்திருக்க முடியும்?"

"உன்னை அங்கே முதல் முதலாகப் பார்த்த உடனேயே, 'நீ அழகி மட்டுமல்ல; கலையரசி மட்டு

மல்ல; பெருமதி படைத்த சீமாட்டி' என்றுதான் நான் எண்ணினேன். என் எண்ணத்தை நீ மெய்ப்பித்து விட்டாய் கலாவதி. என்னைத் தேடி வந்திருக்கிருயே, அதுவே அதற்குச் சான்று."

"கற்றாரைக் கற்றரே காமுறுவர் என்பது எப்படிப் பொய்க்கும் கோபால்? உங்களை மறந்து என்னல் எப்படி இருக்க முடியும்?"

கோபாலனின் முகத்தில் சிறிது சலனம். மேற் கூரையை அண்ணாந்து நோக்கியபடி, "ஹூம்! க...ற்...று...ர்... !... க ..லை ! .. அங்கே கூடியிருந்த முட்டாள்களுக்கு அந்த நினைப்புக் கொஞ்சங்கூட இல்லவே இல்லையே!" என்று சீறினன்.

பவானி மெல்லெனச் சிரித்தாள்.

"அவர்களுக்குக் கலைஞானம் இருந்திருந்தால் உங்கள் விஷயத்திலே இப்படி .."

"உஸ்...! என் விஷயம் கிடக்கட்டும் கலாவதி; நான் ஆண் மகன். ஐசுவரியம் படைத்தவன். என்னை அவர்கள் கௌரவிக்காததால் எனக்குப் பெரிய நஷ்டம் எதுவும் இல்லை. ஆனால் என் மனத் துயரம் எல்லாம் உனக்கு அவர்கள் இழைத்த துரோகத்தை எண்ணித்தான்..."

புத்திசாலியான பவானி கோபாலனின் வாய்ப் பிறப்பைக்கொண்டே தாராபுரத்தில் தன்னைப் போன்ற ஒரு பெண் போட்டியிலே கலந்துகொள்ள வந்திருக்க வேண்டும் என்பதை எடுப்பிலேயே தெரிந்து கொண்டு விட்டாள். கலாவதி என்ற பெயருடைய அப்பெண்ணிடம் எந்த வகையிலோ கோபாலனின்

உள்ளம் ஈடுபாடு கொண்டிருக்கிறது என்பதையும் உணர்ந்துகொண்டாள். கடைசிவரையில் தான் கலாவதியாகவே நடிக்கவேண்டும் என்பதையும் தீர்மானித்துக் கொண்டாள்.

"கலாவதி, இதோ சிற்றுண்டி வகைகள்; உனக்குப் பிடித்தமானவற்றை உட்கொள்ளலாம்."

பவானி கலகலவென்று சிரித்தாள். "நீங்கள்?"

"நான்... நான்... இன்னும் பல் துலக்கவே இல்லை கலாவதி. வெட்கக் கேடு!"

"இதிலே வெட்கக் கேடென்ன, கோபால்? என்னைக் கண்ட சந்தோஷத்தில் நீங்கள் காலைக் கடன்களை மறந்து விட்டீர்கள்."

"இன்றைக்கு அது உண்மைதான். ஆனால்... இன்னும் பல நாட்களில்கூட நான் இந்த அவகேடான நிலைக்கு உள்ளானதுண்டு. தாராபுரத்திலிருந்து திரும்பினது முதல் நான் சரியான நிலையிலேயே இல்லை கலாவதி."

பவானி மீண்டும் மெல்லச் சிரித்தாள். "இனிமேல் அப்படி இருக்கமாட்டீர்கள்; இல்லையா? இந்தாருங்கள், முதலில் பல் துலக்கிக்கொள்ளுங்கள்" என்று அதற்கானவற்றை எடுத்துக் கொடுத்தாள்.

கோபாலன் பல் துலக்கி முகங் கழுவிக்கொண்டு பவானி இருந்த இடத்திற்கு வந்து அமர்ந்து கொண்டான். இருவரும் சிற்றுண்டியை உட்கொள்ளத் தொடங்கினார்கள்.

## 11. புதிய பிரசினை

மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த சுந்தர மூர்த்தி மரகதத்தினிடம் அளவு கடந்த ஆனந்தத்துடன், "அம்மா, ஒரு மாதம் கணக்கிட்டோம்; நிலைமையைப் பார்த்தால் ஒரு வாரம்கூட வேண்டாம் என்றே தோன்றுகிறது. உங்கள் மகள் மகா புத்தி சாலி அம்மா. எடுத்த எடுப்பிலேயே அவனை வலை வீசிப் பிடித்துவிட்டாளே! ..நீங்கள் இருங்கள். இந்த சந்தோஷச் செய்தியைச் சின்ன ஜமீன்தார், ஜமீன் தாரிணி அம்மாள், படுக்கையில் இருக்கும் பெரிய ஜமீன்தார் எல்லாருக்கும் தெரிவித்து விட்டு வருகிறேன்" என்று கூறிக் கிளம்பினார்.

கோபாலன் பேசினான்.

"ஆனாலும் அநியாயம் கலாவதி; மிக அநியாயம் அவர்கள் செய்தது! அழகுப் போட்டிக்கு என்று தேர்ந்தெடுத்துப் பரிசு கொடுத்தார்களே, பார்வதி என்ற ஒரு பெண்ணுக்கு; அவள் உன்னை விடவா அழகு? காலமெல்லாம் கலைக்கென்றே பாடுபட்டு நடனக் கலையை அப்பழுக்கற்ற முறையில் பயின்ற உன்னை ஒதுக்கிப் பாமா என்ற கோர சொரூபிக்குப் பரிசளித்தார்களே; அது எந்த நியாயத்தைச் சேர்ந்தது? உன் நடனத்தைவிட அவளுடைய ஆட்டம் எந்த வகையில் உயர்ந்தது?"

"கிடக்கிறது, தள்ளுங்கள்."

"அன்று உன் தாய் உகுத்த கண்ணீர் என் நெஞ்சையே அறுத்துவிட்டது கலாவதி. இப்போது உன் தாயும் உன்னோடு இங்கே வந்திருக்கிறார்களா?"

என்ன பதில் சொல்வதென்று சற்று யோசித்தாள் பவானி. நொடியில் சமாளித்துக்கொண்டு சமத்காரமாகப் பதில் சொன்னாள்.

"என் அம்மா வரவில்லை; பெரியம்மாள் வந்திருக்கிறாள். நான் போய்ச் சற்று அவளைக் கவனித்துவிட்டு வரட்டுமா?"

"ஆம். அது முக்கியந்தான்; போ. ஆனால் உடனேயே வந்துவிடு."

விடு விடென்று தன் விடுதியை நோக்கி நடந்த பவானி அங்கே சென்று, "அப்பாடா!" என்று சோபாவில் அமர்ந்தாள். அவள் மனக் கண்ணெதிரே கோபாலனின் அழகிய தோற்றம் நிழலாட்டம் காட்டிற்று. 'சர்வாங்க சுந்தரன் என்றால் கோபாலன்தான். நொடிப்பொழுதில் அவர் நிலை திருந்தி விட்டது. நான் வந்த காரியம் எளிதில் முடிந்து விடும். ஆனால்—அவரைப் பிரிந்து எப்படிச் செல்வது?'

சிந்தனையில் மூழ்கி விட்டிருந்த பவானியின் காதில் அவள் தாயின் அழைப்புக் கேட்கவில்லை; கண்ணில் தாயின் உருவம் தென்படவில்லை. மரகதம் அவளை அணுகித் தோளை அசைத்தபின்பே உணர்வு பெற்றாள். "என் பத்தரை மாத்துத் தங்கமடி நீ!" என்று மகளின் கன்னங்களை வருடி, தன் பொட்டுக்களில் நெரித்துக்கொண்டாள் தாய்.

"பெரியவர் கனவிலே வந்த அப்புறமுங்கூட, 'என்ன சூழ்ச்சியோ ஏதோ'ன்னு தவிச்சயே பவானி, இப்பவாவது எல்லாம் உண்மைங்கறது தெளிவாகி விட்டதில்லையா? நானும் சுந்தரமூர்த்தியும் மறைவான இடத்திலே இருந்துகிட்டு, உன்னைக் கண்காணிச்சுக்

கிட்டு இருக்கிறபோதே ஜமீன்தாரிணி அம்மாளும் சின்ன ஜமீன்தாரும் அங்கே வந்தாங்க. அவங்க மகனின் தெளிவைக்கண்டு ஆனந்தங்கொண்டாங்க. நீ ரொம்ப அதிருஷ்டசாலி பவானி! பெரியவர் வாக்கு அப்படியே பலிச்சுட்டுது!"

மரகதம் என்ன என்னவோ சொல்லிக்கொண்டே போனுள். பவானியின் செவியில் அவை ஏறவே இல்லை. 'கோபாலனைப் பிரிந்து சங்கரபுரம் செல்வது எப்படி?'என்ற கேள்வி ஒன்றே அவள் உள்ளத்தைக் கொக்கி போட்டு இழுத்துக்கொண்டிருந்தது.

## 12 உயிரும் உடலும்

கோபாலன் - பவானி பழக்கத்தில் ஆபத்துக்கு இடம் இல்லை என்று தெரிந்ததும் பெரியவர்கள் அவர்களைக் கண்காணிப்பதை விட்டு விட்டார்கள்.

கோபாலன் இப்போது பழைய கோபாலனுகவே இல்லை. தாடி மீசை முதலியவற்றைக் களைந்து சிறப்பான உடைகளில் அவன் நவநாகரிக யுவனுக மிளிர்ந்தான். பவானியைக் கலாவதியாக எண்ணியிருப்பது ஒன்று நீங்கலாக அவனிடம் பழைய குறைகளில் அணுவும் இல்லை. காலம் செல்லச் செல்ல அவன் பழைய விஷயங்களைப் பற்றிப் பேசுவதைக் கூட விட்டு விட்டான். அதுமட்டும் அல்ல; இடைக் காலத்தில் தன் புத்தி பேதலித்திருந்ததையும் அப்போதெல்லாம் தான் நடந்து கொண்ட பைத்தியக்கார முறைகளையும் பற்றி அவளிடம் கேலியாகப் பேசக்கூடச் செய்தான்.

"இதோ பார்த்தாயா கலாவதி, நான் உடைத்துப் போட்ட வீணை! இதோ பார், நான் தீட்டிய கோரமான சித்திரங்கள்!—" என்று ஒவ்வொன்றையும் அவளுக்குக் காட்டினான்.

"கலாவதி, அன்று தாராபுரத்திலிருந்து திரும்பிய போது உன்னைச் சந்தித்து, உனக்கு ஆறுதல் கூறி, உன்னிடமிருந்து ஆறுதலான மொழிகளைப் பெற்று மீண்டிருந்தால் கூட என் நிலை இத்தனை கேவலமாகி யிருக்காது கலாவதி. வஞ்சகர்களின் செயலால் பெற்ற தோல்வி அன்று என்னை எதுவும் செய்ய விட வில்லை. மீண்டும் உன்னைக்கண்ட பிறகுதான் தெளிவு கிட்டிற்று. கலா, நீதான் கலை; கலையே நீ. அவர்கள் கிடக்கிறார்கள் முட்டாள்கள். நான் சொல்கிறேன், கேள். அழகில் சிறந்தவள் கலா; ஆட்டத்தில் தேர்ந்த வள் கலா; இசையில் வல்லவள் கலா; இனிமையாகப் பழகுவதில் இணையற்றவள் கலா — கலா, இனி நீ என்னை விட்டு எங்கும் போய்விடமாட்டாயே! கலா, கலா—"

மூச்சுவிடாமல் இவ்வாறு பேசும் கோபாலனின் குழந்தைத்தனமான மொழிகள் பவானியின் கண் களில் நீரைச் சுரக்க வைத்தன. ஏற்கனவே குழைந்து போயிருந்த அவள் உள்ளம் அவனுடைய அன்பு மொழிகளால் மேலும் குழைந்து உருகிற்று.

சில சமயம் இருவரும் சேர்ந்து ஆடுவார்கள் பாடுவார்கள்; வேறு சில சமயங்களில் ஒருவர் ஆட மற்றவர் பாடுவதும் உண்டு. இருவரும் கைகோத்து அந்த விடுதியிலே வளைய வருவர்; நந்தவனத்திலும் சுற்றித் திரிவர். ஆனால் நந்தவனம் முதலிய வெளிப்

பிரதேசங்களில் மட்டும் பவானி கோபாலனிடமிருந்து சிறிது விலகியே இருப்பாள்.

இவ்வாறெல்லாம் இருந்தும் கோபாலன் தன் விடுதியிலும் நந்தவனத்தின் ஒரு பகுதியிலும் மட்டும் நடமாடினானே தவிர, பவானிதங்கியிருந்த விடுதியின் பக்கமோ, ஜமீன் மாளிகையின் பக்கமோ செல்லவே இல்லை.

சாதாரண காலத்திலேயே அவன் இப்போது புழங்கிவரும் விடுதியைத்தான் கலைக்கூடமாகப் பயன்படுத்தி வந்தான். அங்கே அவனை அன்றி யாருமே அநுமதிக்கப் பெறுவதில்லை. விசேஷ பண்டிகைக் காலங்களிலே மட்டும் மாளிகைக்கு விருந்துண்ண வருவான். தாய், தகப்பன், சிற்றப்பன், மற்றும் உள்ள சுற்றத்தினர் என்றெல்லாம் அவன் உள்ளத்தில் பாசம் இல்லாமல் இல்லை. ஆனால் அதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளும் இயல்பு அவனிடம் இல்லை. எட்டு ஆண்டுகளுக்கு முன் அவனுடைய சிற்றன்னை - அதாவது சின்ன ஜமீன்தாரின் மனைவி-காலமானாள். இவன்தான் ஈமக்கடன்கள் செய்தான். ஊராரும் உறவினரும் பெரு வெள்ளமாகத் திரண்டு வந்து அழுது புலம்பினார்கள். கோபாலன் பொட்டுக் கண்ணீர் சிந்தவில்லை. ஒரு மாதகாலத்திற்குமேல் ஊண் உறக்கம் இன்றி மௌனமாகத் துக்கித்தான்.

இத்தகைய இயல்புடைய அவன் தாராபுரத்திலிருந்து திரும்பியதும் நேரே தன் விடுதியை அடைந்தான். மூன்று நாள் அசைவற்றுப் படுத்துக் கிடந்தான். யார் என்ன முயன்றும் அவன் நிலையை மாற்ற

முடியவில்லை. தானாக எழுந்தபோது இடி இடி என்று சிரித்தான். 'எதுகலை? எது அழகு?' என்றெல்லாம் பிதற்ற ஆரம்பித்துவிட்டான். அவனிடமிருந்து விவரம் எதுவும் கிடைக்கவில்லை என்றதும் தாராபுரம் சென்று விசாரித்தனர். கலைப் போட்டியில் அவன் வஞ்சிக்கப்பட்டான் என்று தெரிந்தது. ஆனால் அவனுடைய மாறுதலுக்குக் காரணம் அவன் வஞ்சிக்கப் பெற்றது மட்டுமல்ல; அவனோடு கூடக் கலாவதி என்ற பெண்ணும் வஞ்சிக்கப் பெற்றதுதான் என்பது அவர்களுக்குத் தெரியாது.

* * *

ஒரு நாள் அந்தி நேரத்தில் கோபாலனும் பவானியும் நந்தவனத்தில் உல்லாசமாகப் பாடிக்கொண்டே உலவி வந்தார்கள். குளக்கரையை அடைந்ததும் அமர்ந்தார்கள். கதிரவன் மறைந்துவிட்டான். இருள், ஒளியோடு இழைந்து உறவாடிக் கொண்டிருந்தது.

"கலாவதி, இன்னும் சிறிது நேரத்திலே இந்த இடம் எப்படி இருக்கும்?"

"வெண்ணிலவின் தண்ணொளியில் மின்னிப் புன்னகை பூக்கும்."

"அந்த இயற்கை எழிலில் மயங்கி நான் நாட் கணக்கில் ஊண் உறக்கத்தை மறப்பேன். நீ?"

"நான் மாதக் கணக்கிலேகூட அப்படி இருக்கத் தாயர். ஆனால்..."

"ஆனால்?"

"அதற்கு நான் பிறக்கவில்லை."

கரகரத்த குரலில் பவானி சொன்ன மொழிகள் கோபாலனின் உள்ளத்தில் ஈட்டிகளாய்ப் பாய்ந்தன.

"ஏன் கலா அப்படிச் சொல்கிறாய்?"

"இத்தகைய சூழ்நிலையில் நான் எப்போதும் இருக்க முடியுமா?"

"ஏன் முடியாது?"

"என்னுடைய ஊருக்கு நான் போக..."

"சு! இன்னொருமுறை என் காதுபட அப்படிப் பேசாதே கலாவதி" என்றான் அவன்.

பவானிக்கு அழுகை குமுறிக்கொண்டு வந்தது. அன்று பிற்பகலில் மரகதம் அவளிடம் சொன்ன செய்திதான் அவள் துயரத்திற்குக் காரணம். சுந்தரமூர்த்தி பாக்கி ரூபாய் பதினாயிரத்தையும் அவளிடம் கொண்டு வந்து கொடுத்து, "இன்னும் இரண்டு மூன்றுநாட்களில் ஜமீன்தார் உங்களைச் சம்மானித்து ஊருக்கு அனுப்பிவிடுவார்" என்றார். அதைக் கேட்டு மரகதம் சந்தோஷம் அடைந்தாள். அந்தச் செய்தியைப் பவானி தாயிடமிருந்து அறிந்தபோது .....

அதை அவள் அவனிடம் எப்படித் தெரிவிப்பது? இரண்டு தடைகள்: முதலாவது, அந்தச் செய்தியினால் அவன்மனம் மீண்டும் பாதிக்கப் பெறலாம். இரண்டாவது, அவன் மறுபடியும் பைத்திய நிலை பெறுவிடினும் பிரிவை ஆற்றாது துயரத்திற்கு உள்ளாகலாம். அது பவானி செய்யும் எசமானத் துரோகம்; அல்லது மேலிடத்துப் பொல்லாப்பு. இந்தக் காரணங்களால் அவள் தன் உள்ளக் கொந்தளிப்பை வெகு பாடுபட்டு அடக்கிக் கொள்ள முயன்றாள். முடியாமல் தவித்தாள்.

"கலாவதி, நான் உடல்; நீ உயிர். உயிரைப் பிரிந்த உடல் நெடுநாள் வாழ்வது உண்டா?

உன்னைப் பிரிந்து என்னால் வாழவே முடியாது கலா" என்று கூறிக் கொண்டே வந்த கோபாலன் தன் வசம் இழந்தவனாய் அவள் கரத்தைப் பற்ற முயன்றான். அவள் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு விம்மலானாள்.

## 13. அங்கும் இங்கும்

குளக்கரையில் செடி மறைவில் இருந்த சின்ன ஜமீன்தாரும் சுந்தரமூர்த்தியும் சட்டென்று பின் வாங்கிக் கொண்டார்கள்.

"சுந்தரமூர்த்தி, பிள்ளையார் பிடிக்கப் போய் அது குரங்காய் முடிந்த கதையாக ஆகிவிடும் போல் இருக்கிறதே விஷயம்! இந்த விபரீதம் தெரிந்தால் அண்ணனும் அண்ணியும் நம்மை லேசில் விடமாட்டார்கள். ஜமீன் குடி படைகளும் கிளர்ச்சி செய்வார்கள். எச்சில் இலை பொறுக்க வந்த நாய் மேலே விழுந்து பிடுங்கினாற்போல் இருக்கிறதே, இந்தப் பெண்ணின் செயல்! நாம் உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்" என்றார் சின்ன ஜமீன்தார்.

"மன்னிக்க வேண்டும் பிரபு. நம் இளைய ஜமீன்தார் இத்தனை தெளிவு பெற்றிருப்பதற்குக் காரணம் இந்தப் பெண் பவானி. அவள் துணிகரமாக உதவ முன்வந்ததை நாம் மறக்கவே முடியாது. 'அவளுடைய தியாகம் மகத்தானது' என்று தாங்களே..."

"அது சரி சுந்தரமூர்த்தி; அவர்கள் கைக் கூலி பெற்றுக் காரியத்தில் ஈடுபட்டாலும் தியாகந்தான். அது மகத்தானது என்பதிலும் சந்தேகம் இல்லை

அதற்காக அந்தப் பெண்ணையும் ஜமீன் இளவரசை யும் தம்பதிகளாக்கிவிட முடியுமா?"

"அப்படிச் செய்ய வேண்டுமென்று யார் சொன்னது?"

"அவர்களாகவே அந்த முடிவுக்கு.."

"பிரபு! அவசரப்படக்கூடா..."

"இனியும் என்னுல் பொறுக்க முடியாது சுந்தர மூர்த்தி! இந்த அவகேட்டைவிட, கோபாலன் பைத்திய மாக இருப்பதே மேல்! வா, இப்பொழுதே மரகதத்திடம் போவோம்."

சுந்தரமூர்த்தி அதற்கு மேல் பேசவில்லை. இரு வரும் மரகதம் இருந்த இடம் சென்ருர்கள். சின்ன ஜமீன்தார் படபடப்பாகப் பேசினுர்.

"அம்மா, இரவு சாப்பாட்டிற்குப் பிறகு நீங்கள் பயணத்திற்குத் தயாராகலாம். கார் வரும். புறப்பட்டு இருப்பிடம் செல்லுங்கள். வீடு போய்ச் சேருகிறவரை யில் நீங்கள் எங்கே போகிறீர்கள் என்பது உங்கள் மகளுக்குத் தெரியக்கூடாது. அதன் பிறகும் நாங் களாக அழைக்கிற வரைக்கும் நீங்களோ, உங்கள் மகளோ, உங்களைச் சார்ந்த வேறு யாராவதோ இங்கே தலைநீட்டக் கூடாது! இது ஜமீன் கட்டளை! எங்களுக்கு உதவியதற்கு நன்றி!"—இப்படிக் கூறி விட்டுச் சுந்தரமூர்த்தியுடன் வெளியேறினுர்.

அவருடைய சொல்லும் செயலும் மரகதத்தின் உள்ளத்தில் அதிகமான உளைச்சலை உண்டு பண்ண வில்லை. அநுபவத்தில் தேர்ந்த புத்திசாலியானதால் விஷயம் இப்படி இப்படி இருக்கும் என்று ஒருவாறு ஊகித்துக் கொண்டாள். அதிகப் பிரயாசை இன்றி

நாலைந்து நாளில் முப்பதாயிரம் ரூபாய் கைக்கு வந்தது ஒன்றுதான் அவளுக்குப் பெரிதாக இருந்தது. அந்தப் பூரிப்பின் முன் மற்றவையெல்லாம் துரும்பாகத் தோன்றின. ஆகவே அவள் உற்சாகத்துடனேயே துணி மணி முதலிய சாமான்களை எடுத்து மூட்டை கட்டிப் பிரயாணத்திற்குத் தயார் செய்யத் தொடங்கினுள்.

இங்கே ஒரு சாரார் பிரிவுக்குரிய வேலையில் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருக்க, அதே சமயத்தில் அங்கே; குளக் கரையில்—

அன்று, அந்தக் கணம் வரையில் கோபாலனும் பவானியும் அத்து மீறி ஒருவரை ஒருவர் நெருங்கியதில்லை. இப்பொழுது அப்படியொரு சந்தர்ப்பம் நேர்ந்ததும் பேச்சுக்கே இடமற்ற நிலையில் அவர்கள் உள்ளங்கள் பின்னிப் பிணைந்து கிடந்தன.

திடீரென்று பவானியின் உள்ளத்தில் இருவகையான அச்சம் எழுந்தது. ஒன்று, ஜமீன் சம்பந்தப்பட்டது; மற்றது அந்தப் பெரியவர் சம்பந்தப்பட்டது. 'நாம் இங்கே என்ன செய்ய வந்தோம்; என்ன செய்கிறோம்?' என எண்ணிப் பார்த்தாள். உடனேயே விழிப்பை அடைந்தாள்.

சிறு குழந்தையை, 'ஒன்றைச் செய்யாதே'என்று தடுக்கத் தடுக்க அது திரும்பத் திரும்ப அதையே செய்யும். எறும்பை ஒரு புறத்திலிருந்து மறு புறத்திற்குத் தள்ளத் தள்ள, அது மீண்டும் மீண்டும் அந்த இடத்திற்கே வரும். அதே போல் பவானி விழிப்புடன் ஒதுங்க முயல முயல, கோபாலன் மேலும் மேலும் அவளை அணுகவே முயன்ருன்.

"கோபால்! நாம் இங்கே வந்து வெகு நேரமாகி விட்டதே! விடுதிக்குச் செல்ல வேண்டாமா?" என்றாள் பவானி.

"ஆம், வா போகலாம்" என்று எழுந்தான் அவன். இருவரும் விடுதியை நோக்கி விரைந்தனர்; சிறிது தூரம் சென்றதும் பிரிந்தனர்.

## 14. பிரிவு

"இதெல்லாம் என்ன அம்மா?"

அலையாக் குலைய வந்து எதிரே நின்ற மகளைப் பார்த்த தாய், ஒரு கணம் தம்பித்துப் போனாள். பிறகு அழுத்தமான குரலில், "அதோ இருக்கிற நிலைக் கண்ணாடியைக் கேள்" என்றாள்.

பவானி நிலைக் கண்ணாடியின் முன் சென்று நின்றாள். உடனேயே அவள் உள்ளமும் உடலும் கூசிக் குறுகின. கலைந்திருந்த கூந்தல், திலகம், உடை முதலியவற்றைச் சீர்செய்து கொண்டாள். நெஞ்சு திக் திக்கென்று அடித்துக் கொண்டது. மறுபடியும் தாயின் எதிரே வரத் துணிவின்றி அங்கேயே ஒரு புறமாக அமர்ந்தாள்.

"பவானி, சீக்கிரம் சாப்பாட்டை முடிச்சுக்க!"

"நான் சாப்பிட்டாகி விட்டதம்மா."

"அப்படியானா கிளம்பு."

திடுக்கிட்டுப் போனாள் பவானி. "எங்கே அம்மா?"

"சொன்னாத்தான் கிளம்புவாயோ? சங்கரபுரத்துக்கு."

"ஏன் அம்மா அதற்குள்?"

"தகராறு செய்யாதே! கிளம்பு!"

"வேண்டாம் அம்மா."

"என்ன?..."

மரகதத்தின் கர்ஜனை நந்தவனமெங்கும் எதிரொலித்தது.

"என்னால் வர முடியாதம்மா."

சாகசத்தில் தேர்ந்தவள் மரகதம். ஒரு நொடிக்குள் தன் நிலையில் மாற்றங்கொண்டாள்.

"அசட்டு மகளே! உன்னை எனக்குத் தெரியாதா? சுவரை வச்சல்ல சித்திரம் தீட்டணும்? விடிஞ்சா என்ன நாளுங்கறதை நினைச்சுப் பார்!"

"எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையம்மா."

"நாளை நம்ம குல தெய்வத்துக்குப் பூசை போடற நாள் இல்லையா? தெய்வச் செயலா சாயங்காலம் அது நினைவுக்கு வந்தது. உடனே சின்ன ஜமீன்தாரைக் கண்டு விவரம் சொன்னேன். அநுமதி கிடைச்சுது. இப்போ போய்ட்டு நாளை ராத்திரியே திரும்பணும்."

'குலதெய்வத்திற்குப் பூசை' என்றதும் பவானி வாயடைத்துப் போனாள்.

ஒரு நிமிஷத்திற்குப் பின் தீனமான குரலில், "நீ மட்டும் போய்...." என்று இழுத்தாள். "என்ன சொன்னே?" என்று மரகதம் அதட்டவே வாயை மூடிக்கொண்டாள்.

அடுத்த சில நிமிஷங்களுக்குப் பின் காற்றைக் கிழித்துக் கொண்டு கனவேகமாய்ப் பறந்து செல்லும் ஜமீன் காரில் தாயும் மகளும் பிரயாணம் செய்து கொண்டிருந்தனர்.

சிறிது நேரத்தில் மரகதம் உறங்கிவிட்டாள். பவானி ஆசனத்தில் சோர்ந்து சாய்ந்து கிடந்தாள். அவள் கண்களிலிருந்து பெருகிய நீர் அவளுடைய மாம்பழக் கன்னங்களின் வழியே உருண்டோடி அவள் மடியிலே முத்து முத்தாய் விழுந்துகொண்டிருந்தது. சோகச் சிலையாய்ச் சமைந்திருந்த அவளுடைய நெஞ்சுக்குள்ளே கோடாநு கோடி எண்ணங்கள் முளை விட்டுத் துளிர்த்தபடி இருந்தன. தாயின் சொல், 'நாளை இரவு பெரிய நத்தம் திரும்பிவிடலாம்' என்பது. அது உண்மையாகவும் பட்டது; அதில் சூது இருப்பது போலும் தோன்றிற்று. 'இனி மேல் கோபாலனைக் காண முடியாமலே போய்விடுமோ!' என்ற ஏக்க உணர்ச்சிதான் அனைத்திலும் தலை தூக்கி நின்றது உணர்ச்சியற்ற காருக்குப் பவானியின் நிலை என்ன தெரியும்? அது சங்கரபுரத்தை நோக்கி ஓட்டமாக ஓடிக்கொண்டிருந்தது.

## 15. கலாவதிப் பைத்தியம்

பொழுது புலர்ந்து வெகு நேரமாகியும் பவானியைக் காணுது பரிதவித்தான் கோபாலன். விடுதியிலே வாசலுக்கும் உள்ளுக்குமாக அலைந்து அலைந்து அவன் கால்கள் கடுத்தன. காலைப்போது எப்படி விறுவிறுப்பாக ஏறிற்றோ, அதே போல அவனுடைய ஏக்கமும் மலையாய் வளரலாயிற்று.

இதோ அதோ என்று நடுப்பகல் ஆகியும் பவானி வரவில்லை என்றதும் அவன் உள்ளம் வெடித்துவிடும் போல் ஆகிவிட்டது. மெல்ல விடுதியைவிட்டு வெளி

வந்தான். எதிரே தென்படும் பணியாளரிடமெல்லாம், "'கலாவதி எங்கே?" என்றான்.

தங்களிடம் பேசியே அறியாத இளைய ஜமீன்தார் ஒரு கேள்வி கேட்டதும் அவர்களுக்கு மிகக் குதூகலம்! பவானியின் விடுதிக்குத் தலைதெறிக்க ஓடித் திரும்பி வந்து, "இல்லை" என்று கை விரித்தனர். கோபாலன் அரண்மனையில் நுழைந்தான். ஒவ்வொரு இடமாகப் பவானியைத் தேடி அலைந்தான்.

பல அறைகளில் புகுந்து புறப்பட்டவன் அதே போக்கில் பெரிய ஜமீன்தார் படுத்திருந்த அறைக்குள்ளும் சென்றான். அங்கே அவருடைய மஞ்சத்தைச் சுற்றி ஜமீன்தாரிணி, சின்ன ஜமீன்தார், சுந்தரமூர்த்தி முதலியோர் அமர்ந்து அவனைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தனர்.

"கோபாலா!" என்றார் ஜமீன்தார்.

தகப்பனாரின் தோற்றத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய்விட்டான் கோபாலன்.

"அப்பா!" என்று கூவியபடி அருகே ஓடினான். தந்தையும் தனயனும் தழுவிக் கொண்டனர்.

"என்ன அப்பா, இப்படி இளைத்துப் போய்விட்டீர்களே!" என்றான் கோபாலன்.

"எல்லாம் உன் மாறுபட்ட நிலையினால்தான் கோபாலா. நீ திருந்திவிட்டாய்; இனி என் உடம்பும் தேறிவிடும்" என்றார் ஜமீன்தார்.

அருகே நின்ற சுந்தரமூர்த்தியை நோக்கி, 'கலாவதி எங்கே?" என்றான் கோபாலன்.

சின்ன ஜமீன்தார் சட்டென்று சொன்னார்.

"அவர்களுடைய குலதெய்வத்திற்குப் பூசை போட வேணுமாம்; போயிருக்கிறார்கள். வந்துவிடுவார்கள்."

"என்னிடம் அவள் சொல்லவே இல்லையே?"

"அவளுக்கே தெரியாது. நடு இரவிலே ஊரிலிருந்து ஆள் வந்து, கிளப்பிச் சென்றார்கள்."

என்னையும் அழைத்துப் போயிருக்கக் கூடாதோ?"

"செய்திருக்கலாம்."

"அல்லது அந்தப் பூசையை இங்கேயே நடத்தியிருக்கக் கூடாதோ? அவர்கள் ஊர் எது?"

"தெரியாதே!"

"விசாரியுங்கள். நான் உடனே அங்கே போக வேண்டும்."

தாய் குறுக்கிட்டுப் பேச்சை மாற்றினாள். சிறிது நேரத்திற்குப் பின் அவன் விடுதிக்குத் திரும்பினான்.

அன்றைப் பொழுது அவனுக்கு நரக வேதனையாக இருந்தது.

அடுத்த இரண்டு மூன்று நாட்களுக்கு அவன் படுத்தி வைத்த பாடு கங்கு கரையில்லை. ஆனால் அவனுடைய கலாவதி மறைந்து போன நிகழ்ச்சி காரணமாக அவனிடம் வேறொரு மாறுதல் உண்டாகியிருந்தது.

அதுவரை தன் விடுதிக்குள்ளாகவே உழன்று கொண்டிருந்தவன் அதன் பிறகு அடிக்கடி ஜமீன் மாளிகைக்குள் போய்வரத் தலைப்பட்டான். அங்கேயே குளிப்பது, உண்பது, உறங்குவது முதலிய செயல்

களையும் சில சமயம் செய்ய ஆரம்பித்தான். அத்துடன் அனைவரோடும் பேசிப் பழகவும் தொடங்கினான்.

ஆனாலும் அவ்வளவிலும், அவனுடைய கலாவதி ஜபம் குறையவே இல்லை.

இப்போது அவன் கலைப் பைத்தியமாக இல்லை; கலாவதிப் பைத்தியமாகப் படுக்கையிலே உழன்று கொண்டிருந்தான்.

## 16. கோபாலனோடு நான் ஆடுவேனே!

'குல தெய்வத்திற்கு நாளை பூசை போடவேண்டிய நாள்' என்று மகளிடம் பொய்தான் சொன்னாள் மரகதம். ஆனால் சொன்னபடியே மறுநாள் பூசை போட ஏற்பாடு செய்தாள். 'நல்ல காரியந்தானே? ஒரே ஆண்டில் இரு முறை செய்தால் என்ன தவறு?' என்பது அவளுக்கு.

அன்றைய பொழுது படுகிற நேரத்திலேயே பவானி தாயைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்துவிட்டாள், பெரிய நத்தத்திற்குச் செல்வது பற்றி. மரகதம் முதலிலெல்லாம் மிகவும் நயமாக ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லி வந்தாள். வர வர இம்சை அதிகரித்தபோது சிள்ளென்று விழுந்தாள். அன்றிரவு பவானி உணவு கொள்ளவில்லை. இரவெல்லாம் தூங்காமல் கண்ணீர் சிந்தியபடி படுக்கையில் புரண்டு கொண்டு கிடந்தாள்.

மறுநாள் விடிந்தது; உச்சிப் போதாயிற்று; மாலை வந்து சென்று இரவாயிற்று. பவானியின் எண்ணம் பகற் கனவாயிற்று.

மூன்றும் நாள் காலையில் படுக்கையை விட்டு எழுகிற போதே பவானியின் மன நிலை சரியாக

இல்லை. காரணம் முன் இரவில் அவள் சிந்தனை முழுவதும் கோபாலனை, முதல் முதலாகச் சந்தித்த காட்சியையே சூழ்ந்திருந்ததுதான்.

அந்தக் காட்சி....

பவானி விருட்டென்று படுக்கையை விட்டெழுந்தாள்; அலங்கார அறைக்கு விரைந்தாள்; நிலைக் கண்ணாடியின் எதிரே நின்றாள்; சிவசக்தி நடனத்தில் ஓர் அழகான முத்திரையை அபிநயித்தாள்.

சட்டென்று பின்புறம் திரும்பினாள்.

"கலாவதி!...."

இவ்வாறு கூவிக்கொண்டே அறை வாயிற்படியை நோக்கிப் பாய்ந்தோடினாள். கதவருகே நின்று, "கலாவதி! கலாவதி!" என்று இரு கைகளையும் பிசைந்தாள்.

இது தான் ஆரம்பம். இதிலிருந்து தொடர்ந்து கோபாலனோடு அவள் பழகிய காட்சிகள், உரையாடல்கள் அனைத்தும் வரிசையாக அவள் செயல்களில் இடம் பெற்றன.

நீண்ட நேரம் ஆகியும் மகள் எழுந்து வரவில்லையே என்று அவளுடைய படுக்கை அறைக்குச் சென்று பார்த்த மரகதம் அங்கே மகள் இல்லாது போகவே வீட்டின் ஒவ்வொரு பகுதியாகத் தேடிக் கொண்டே வந்தாள். அலங்கார அறையில் பவானியின் குரல் கேட்டது. வெறுங் குரல் அல்ல; பாடும் ஒலி!

"எது இன்பம்? எது அழகு? எது உண்மைக் கலை?..."

அறை வாயிலை அடைந்த தாய் பிரமித்து நின்றாள். பாட்டு முடிந்ததும், "பவானி!" என்றாள்.

பவானி தாயை வெறித்து நோக்கினாள். பிறகு அவள் பக்கம் பாய்ந்து அவள் கைகளைப் பற்றிக் கொண்டு, "எது அழகு? எது உயிரோவியம்? எது சுஸ்வரமான சங்கீதம்? எங்கே இருக்கிறது உண்மைக் கலை? சொல்! சொல்!" என்று கர்ஜித்தாள்.

"ஐயோ என் மகளே!" என்று வீரிட்டு அலறி அழத் தொடங்கிவிட்டாள் மரகதம். அதைக் கண்டு பவானி இடி இடி என்று சிரித்தாள்.

பவானிக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்ற செய்தி ஊரெங்கும் பரவி விட்டது.

## 17. பாவையும் பகையும்

ஜமீன் சம்பந்தப்பட்ட முக்கியமான ஓர் அலுவலை முன்னிட்டு வெளியூர்ப் பயணத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்தார் சின்ன ஜமீன்தார் ஜயபாலன். காலைச் சிற்றுண்டியை உட்கொண்டு உடைகளைத் தரித்துக்கொண்டு பீரோவைத் திறக்கச் சென்றவர் பார்வையில் அங்கிருந்த பெரிய நிலைக் கண்ணாடியில் தோன்றிய அவருடைய பிம்பம் தென்பட்டது. சற்று நின்று உற்றுப் பார்த்தார்.

அவருக்கு அப்போது வயது நாற்பது. ஆனால் முப்பதே மதிக்கத்தக்க உடற்கட்டு. தலையிலே ஒரு சிறு நரைகூட இல்லை. கருகரு வென்று அடர்ந்து வளர்ந்திருந்த தலைமயிர் உயர்தரமான வாசனைத் தைலம், 'வாசிலைன்' முதலியவற்றின் சேர்க்கையால் நன்கு படிந்து பளபளத்தது. அதன் சோபையை மேலும் எடுத்துக் காட்டும் முறையில் சரம் கோத்

தாற்போல் வரிசையாக அமைந்த வெளேரென்ற பல் வரிசை.

கண்ணாடியிலே தம் உருவைக் கண்டதும் அவர் நீண்ட பெருமூச்செறிந்தார். இரண்டு மூன்று நாட்களாக அவர் மனத்திலே பல விதமான எண்ணக் குவியல்கள் சேர்ந்து அங்கே ஒரு திணறலை உண்டு பண்ணிக்கொண்டிருந்தன. அந்தத் திணறலின் ஓர் அலையே இந்தப் பெருமூச்சு.

பரம உத்தமியும் அதிரூபவதியுமான மனைவி அகால மரணம் அடைந்ததில் அவர் மனமுடைந்து போனார்; தமையனார் முதல் எவ்வளவோ பேர் வற்புறுத்தியும் அவர் மறுமணம் செய்துகொள்ள இசையவில்லை. "அவளோடு வாழ்ந்த என்னால் இனி எவளோடு வாழ முடியும்?" என்று தீவிரமாக இருந்துவிட்டார். வெகு அபூர்வமாக எப்போதாவது சபலத்தினால் துன்புற நேர்ந்தால் உடனே மனத்தை, மாண்டு மடிந்த மனைவியின் நினைவிற்கே விரட்டுவார். அந்தத் துயர நினைவில் மற்ற உணர்வுகள் பொசுங்கிச் சாம்பலாய்ப் போய்விடும்.

பெருமூச்சுக்குப் பின் இப்பால் திரும்பிய அவர் பார்வையில் அவருடைய மனைவியின் உருவப் படம் தென்பட்டது. அதையே கண் இமைக்காது சற்று நேரம் பார்த்துக்கொண்டிருந்தார்.

"பிரபு!"

சின்ன ஜமீன்தார் அறை வாயிலை நோக்கினார். காரோட்டி பணிவுடன் நின்றிருந்தான்

"பிரபு! யாரோ ஒரு பெண் தங்களைப் பார்க்க வந்திருக்காங்க."

"என்னைப் பார்க்கவா?"

"நமஸ்காரம்." — இதற்குள் அந்தப் பெண்ணே அங்கே வந்து விட்டாள்.

அவர் சடக்கென்று திரும்பினர். 'ஆ!' என்றது அவர் உள்ளம் ஒரு கணம் திகைப்பினலும் பிரமிப்பினலும் திணறிப் போனர். உடனே அவர் பார்வை அவரை அறியாமலே அவர் மனைவியின் படத்திற்குத் தாவிற்று.

"மன்னிக்க வேண்டும். எங்கேயோ புறப்பட்டுக் கொண்டிருக்கிற வேளையில்..."

அவள் பேச்சு அவரைச் சரியான உணர்வுக்குக் கொண்டு வந்தது சுதாரித்துக்கொண்டு பேசினர். "ஆமாம். வெளியே செல்லத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். ஆயினும் பரவாயில்லை" என்று பேச்சை முடித்தவர் மறுபடியும் தொடர்ந்தார்.

"இந்தமாதிரி சந்தர்ப்பங்களில் யாருமே என்னைக் காணத் துணிந்து வரமாட்டார்கள். தெரியாதவர்கள் யாராவது வந்தால் நான் பேட்டி தரவும் மாட்டேன். இப்போதும் பேட்டியை மறுக்கத்தான் இருந்தேன். உன்னைப் பார்த்ததும்..."

"பார்த்ததும்?"

ஜயபாலன் லேசாகச் சிரித்தார். பிறகு தம் மனைவியின் படத்தைச் சுட்டிக் காட்டி, "இது என் மனைவியின் படம்" என்ருர்.

அந்தப் பெண் அந்தப் படத்தைப் பார்த்தாள். ஆனல் அவர் அதை எதற்காகத் தனக்குச் சுட்டிக் காட்டினர் என்பது புரியாமல் திகைத்தாள்.

"கடன் பட்டம் ஒன்றை இதன் அருகே மாட்டினால் இரண்டிற்கும் வித்தியாசமே தெரியாது" என்று நிறுத்தினார் ஜயபாலன்.

சின்ன ஜமீன்தார் சம்பந்தமற்ற வார்த்தைகளை ஏன் பேசுகிறார் என்பது அவளுக்குப் புரியவில்லை. புருவத்தை நெரித்துக் கொண்டாள். இணையற்ற அவளுடைய சௌந்தரியத்திற்கு அந்தச் செயல் மிக எடுப்பாக இருந்தது.

சுந்தரமூர்த்தியோடு சங்கரபுரம் சென்றபோது மரகதத்தின் இல்லத்தில் பவானியைப் பார்த்த உடனேயே ஜயபாலன் உள்ளத்தில் மின்னலின் தாக்குதல் ஏற்பட்டது. வயது, உயரம் இரண்டைத் தவிர பவானி அவர் மனைவியின் சாயலை அப்படியே கொண்டிருந்தாள். எனினும் அவர் உள்ளத்தில் அந்த அதிர்ச்சியின் வேகம் அதிக நேரம் நீடித்திருக்கவில்லை. அப்போதெல்லாம் அவர் மனம், சொல், செயல் அனைத்திலுமே கோபாலன் விஷயம் ஒன்றே முக்கியத்துவம் பெற்றிருந்ததுதான் அதற்குக் காரணம்.

பவானியும் மரகதமும் ஜமீன் அரண்மனைக்குள் நுழைந்தபோது - அசைப்பிலே பவானியைப் பார்த்த போது - மீண்டும் ஒரு முறை அவர் உள்ளம் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. இம்முறையில் அந்த நினைவலைகள் சிறிது நேரம் நீடித்து மோதின; அதைப் பற்றிச் சிந்திக்க அப்போது அவருக்கு அவகாசமும் இருந்தது. ஆனால் அவள் தகுதியும் அவர் தகுதியும் ஒன்றோடு ஒன்று முட்டி மோதி அந்தச் சிந்தனை இழையை நலிய வைத்து விட்டன.

கோபாலனும் பவானியும் நெருங்கி உறவாடு வதைப் பார்த்தபோது மூன்றாவது முறையாக அவர் நெஞ்சம் தத்தளிப்புக்கு உள்ளாயிற்று. அதே சமயத் தில் ஆத்திரமும் அதிகரித்தது. பாரம்பரைக் கௌர வத்தைக் காப்பாற்றப் பவானியை அங்கிருந்து துரத்தினார். அவள் போய் விட்டாள். ஆனால் அவர் இருதயத்திலே விழுந்த பொறி அவியவில்லை. உள் ளுக்குள்ளேயே கனிந்துகொண்டிருந்த அது வரவர அவரை ஆட்கொள்ளத் தொடங்கிற்று. நேற்றுவரை நல்லவராக இருந்த ஜயபாலன் இன்று பொல்லாத வராக மாறி விட்டார் — நாளடைவில் அந் நிலையைப் பெற்று விட்டார். இத்தகைய சந்தர்ப்பத்தில் வலு விலே எதிரே வந்து நின்ற யுவதி அவரைப் பித்த ராக ஆக்கியதில் வியப்பு ஏதும் இல்லை. அதிலும் பவானியைக்காட்டிலும் அவளிடம் அவர் மனைவியின் ஜாடை நிறைவுற்றிருக்கிறதென்றால்—

ஜயபாலன் உட்கார்ந்துகொண்டார். அந்த யுவதியின் உள்ளத்தில் உள்ளே வந்தபோது இருந்த தெளிவு இல்லை.

"என் பெயர் கலாவதி—"

"கலாவதி!"

அவளிடம் வெறுப்புணர்ச்சி பிறந்தது.

"ஆம். அடிக்கடி கேட்ட பெயர் இது. மிகவும் அழகான பெயர்."

"அடிக்கடி எங்கே கேட்டீர்கள்? உங்கள் மகன் கோபாலன் சொல்லித்தானே?"

"கோபாலனை உனக்குத் தெரியுமா கலா?"

உரிமையோடு அவர், 'கலா' என்றது அவள் உள்ளத்தில் எரிச்சலைத் தோற்றுவித்தது. எனினும் அமரிக்கையாகச் சொன்னாள். "என்னுடைய ஊர் முகிலம்பட்டி; என் தகப்பனார் பெயர் அகிலேசுவரன்; அவர் ."

"முகிலம்பட்டி அகிலேசுவரன் பெண்ணா நீ? அவர் எங்களுக்கெல்லாம் உறவினராயிற்றே?"

"ஆம். என் அப்பாகூட அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார். அவருக்குப் பின் எங்கள் குடும்பம் வறுமை நிலைக்கு உள்ளாகி விட்டது. எனக்குச் சிறிது சாரீர 'வசதி உண்டு. பாடப் பயின்றேன்; ஆடவும் பயின்றேன். தாராபுரம் போட்டிக்குப் போன போது..."

"ஓ! புரிந்தது; புரிந்தது."

"அங்கே நியாயப்படி எனக்குக் கிடைக்க வேண்டிய பரிசும் புகழும் பொருளும் கிடைக்க வில்லை. அதை எண்ணி வருந்தியவர்கள் பலர். ஆனால் கோபாலன் அதுவே காரணமாக மூளையைக் குழப்பிக் கொண்டு விட்டார் என்று .."

"ஐந்து வருஷத்துச் செய்தி."

"நான் நாலு நாள் முன்புதான் அறிந்தேன்."

"சரி. இப்போது அவனைப் பார்த்து?"

"தேறுதல் சொல்லி அவர் நிலையை—"

"என்ன தேறுதல் சொல்வாய்?"

"கமிட்டியார் புனராலோசனை செய்து எனக்குப் பரிசளித்து விட்டதாக"

"அதற்குரிய அடையாளம்?"

"இதோ, இந்தத் தங்கப் பதக்கமும் தங்க நடராசர் சிலையும்."

"இவை ஏது உனக்கு?"

"அங்கே பரிசு பெற்ற பெண்களின் காலில் விழுந்து மன்றாடி வாங்கி வந்தேன்."

"கலாவதி!"

"என்ன?"

"நீ கோபாலனைச் சந்திக்க முடியாது."

"ஏன்?"

"கலாவதி!"—

ஜயபாலன் இருக்கையை விட்டு எழுந்தார். எதையோ சொல்ல வகை புரியாமல் அவர் தத்தளிக்கிறார் என்பது நன்கு புலனாயிற்று. ஒரு முறை தம் மனைவியின் படத்தை ஏறெடுத்துப் பார்த்துவிட்டு மீண்டும், "கலாவதி!" என்று அழைத்தவாறு அவளைச் சமீபித்தார்.

சட்டென்று இரண்டடி பின் வாங்கினாள் கலாவதி. அங்கே இருந்த சாளரத்தின் வழியே நந்தவனம் தெரிந்தது; விடுதிகள் தெரிந்தன. அங்கே....

கோபாலன் தன் விடுதி வாயிலில் கைகளைக் கட்டிக் கொண்டு மெல்ல உலவிக் கொண்டிருந்தான். அதைக் கண்ணுற்ற கலாவதி சரேலென்று அறை வாயிற்படியை அடைந்து, அதைக் கடந்து, நந்தவனத்தை நோக்கி ஓட்டமாக ஓடினாள். ஜயபாலன் பல்லை நறநறவென்று கடித்தார்.

## 18. சந்திப்பும் சங்கடமும்

"கோபால்!..

திடுக்கிட்டு நின்று திரும்பிப் பார்த்தான் கோபாலன். அவன் கண்கள் தெறித்து விழுந்து விடுகிறாற் போல் அகன்று பளபளத்தன. சிறிது பொறுத்து இதழ்கள் அசைந்தன. "கலாவதி! கலாவதி!" என்று மெல்ல உச்சரித்தான்.

கலாவதிக்கு உணர்ச்சி தாங்கவில்லை. மேல் மூச்சு வாங்க, "ஆம். கலாவதிதான். உங்கள் கலாவதிதான். உங்களைக் காணவென்று ஒரு நூறு மைலுக் கப்பாலிருந்து ஓடோடி வந்திருக்கும் உங்கள் கலாவதிதான். தாராபுரப் போட்டியிலே யார் வஞ்சிக்கப் பெற்றதற்காக நீங்கள் மனநிலை தடுமாறி ஆண்டுக் கணக்கில் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தீர்களோ, அதே கலாவதிதான். உங்களுக்கு நல்ல செய்தி சொல்ல, உங்கள் மன நிலையைச் சீர் செய்ய ஓட்டமாக ஓடி வந்திருக்கிறேன். கமிட்டியார் புனராலோசனை செய்து எனக்குரிய பரிசுகளை அளித்து விட்டார்கள். இதோ பாருங்கள்!" ... என்றாள்.

நெட்டுருப் போட்டுக் கொண்டு வந்த பாடத்தை ஒரே மூச்சில் ஒப்பித்துவிட்டுக் கைப் பைக்குள் இருந்த பரிசுப் பொருள்களை எடுத்து அவன் முன் நீட்டினாள் கலாவதி.

அவற்றைக் கண்ட கோபாலனின் கண்கள் முன்னிலும் அதிகமாக இப்போது விரிந்தன.

"நீ கலாவதி! ஆம் உண்மையில் நீதான் தாராபுரத்திற்கு வந்திருந்த கலாவதி. ஆனால் நீயாக

நடித்து என் உள்ளத்தைக் கவர்ந்து சென்ற அந்தக் கலாவதி? அவள் யார்?''

“ஆ!''

கலாவதியின் நடுங்குங் கரங்களிலிருந்த பரிசுப் பொருள்கள் பொட்டென்று கீழே விழுந்தன. விநிதிப் படி கருங்கல். நடராஜர் உருவம் அதில் விழுந்தது. அதன் நிலை....

கோபாலன் சிரித்தான். பயங்கரமாக அல்ல; அமரிக்கையாக.

''நாடகமே உலகம்; உலகமே நாடகம். கலாவதி, வா அம்மா, உள்ளே வா. இப்படி வந்து உட்கார்ந்து கொள்.''

கலாவதியின் செவிகளில் கோபாலனின், 'வா அம்மா' என்ற சொற்கள் நாராசமாய் விழுந்தன. சற்று முன் அவன் கூறிய, 'என் உள்ளத்தைக் கவர்ந்து சென்ற அந்தக் கலாவதி' என்ற வார்த்தைகளுக்கும் இந்த வார்த்தைகளுக்குந்தான் எத்தனை பொருத்தம்!

'இவள் எவளோ! இவர் உள்ளத்தைக் கவர்ந்து சென்றவள்; நான், 'அம்மா' என்ற மரியாதை அடை வுடன் அழைக்கப் பெறுபவள்!'

''என்ன யோசிக்கிறாய் கலாவதி?''

“திரும்பிப் போவதைப் பற்றித்தான்.''

“இதற்குள்ளாகவா?''

“ஆம். நான் பரிசுகளைப் பெற்றுவிட்டேன் என்று சொல்ல வந்தேன். சொல்லி உங்கள் மனக் கோளாற்றைத் தீர்க்க வந்தேன். முன்னதாகவே உங்கள் கோளாறு இன்னொரு கலாவதியால் தீர்ந்துவிட்டது. இப்போது உங்கள் உள்ளத்தில் நிறைந்திருப்பதெல்

லாம் அவள் நினைவு ஒன்றுதான் என்று தெரிந்திருந்தால் நான் வந்திருக்கவே மாட்டேன்."

அவள் துக்கத்தோடும் கோபத்தோடும் பேசுகிறாள் என்பதை அவளுடைய முகத் தோற்றமும் உதட்டுத் துடிப்பும் கண்ணீர் மல்கும் கண்களும் படபடப்பான சொற்களும் அறிவித்தன.

"நாலு நாட்களுக்குமுன் என் நிலையைக் கேள்வியுற்றாய். அதைச் சீர் செய்ய ஓடி வந்தாய். அப்படிப்பட்டவள் முன்னதாகவே நான் சீர் பெற்றுவிட்டதைக் கண்டு சந்தோஷம் அல்லவா அடையவேண்டும்? உனக்கு வருத்தம் ஏற்படக் காரணம்? நீ செய்ய நினைத்ததை உன்னை முந்திக் கொண்டு வேறொருத்தி செய்துவிட்டாளே என்றா?"

" அவள் அதை மட்டும் செய்யவில்லையே?"

"ஆம். இன்னொன்றையுந்தான் செய்துவிட்டுப் போய்விட்டாள். அந்த இன்னொன்றை அவள் செய்ததுதானே என் திருத்த நிலைக்கு முழுக் காரணம்?"

"கோபால்... "

அவ்வளவுதான். இரு கைகளிலும் முகத்தைப் புதைத்துக் கொண்டு விசிக்கலானாள் கலாவதி. அதைக் கண்ட கோபாலன் உள்ளத்தில் அநுதாபமும் ஆத்திரமும் குமுறிக் கொண்டு எழுந்தன. உரிமையோடு, "ஐந்து வருஷமாகத் தூங்கினாயா? அல்லது தவம் செய்தாயா?" என்று கர்ஜித்தான்.

"ஆம். தூங்கவில்லை; தவம்தான் செய்தேன். அதை இப்பொழுது சொன்னால் நீங்கள் எப்படி நம்புவீர்கள்?" என்று அதே கர்ஜனைக் குரலில் பதில் இறுத்தாள் கலாவதி. தொடர்ந்து சொன்னாள்.

"உங்களை என்று தாராபுரத்திலே கண்டேனே, அன்றே உங்கள் மோகன வடிவிலும் கலைத் திறனி லும் என் உள்ளத்தைப் பறிகொடுத்தேன். பயன்? ஊமையின் கனவு தானே என் நிலை? நீங்கள் ஜமீன் இளவரசு; நான் சாமானிய குடும்பப் பெண். 'கிட்டா தாயின் வெட்டென மற' என்று சொல்வது சுலபம்; அநுஷ்டிப்பது துர்லபம். அருகில் நெருங்கத் தகுதி இல்லை என்பதனால் வாளா இருந்தேன். நாலு நாள் முன் உங்கள் நிலையை நான் கேள்விப்பட்டபோது 'இதோ நெருங்க வழி' என்று என் உள்ளம் துள் ளிற்று. உடனே புறப்பட்டு வந்தேன். இங்கே என்னைத் தெய்வம் சதி செய்திருக்கிறது."

பேச்சின் முடிவிலே குமுறி அழத் தொடங்கினாள் கலாவதி. கோபாலன் கண்களில் நீர் வளையமிட்டது.

"கலாவதி,வருந்தாதே. தெய்வம் உன்னை மட்டுந் தான் சதி செய்துவிட்டது என்று எண்ணாதே. என்னையுந்தான் சதி செய்துவிட்டது."

"என்ன?" என்று திடுக்கிட்டு அவனை நிமிர்ந்து பார்த்தாள் கலாவதி.

மறுபடியும் கோபாலன் பேசினான்.

"கலாவதி, சில நாள் முன் உன் பெயரைச் சொல்லிக்கொண்டு ஒரு பெண் இங்கே வந்தாள்; இருந்தாள்; போனாள். சாயல், நடை உடை அனைத்தும் உன் போலவேதான். அவளாக வந்தாளோ, என் வீட்டார்தான் அழைத்து வந்தார் களோ? அவளாக வந்திருக்கமுடியாது. என் நிலையை மாற்றவென்று இவர்கள்தான் அழைத்து வந்திருக்க வேண்டும். அவளைச் சரியாகப் புரிந்து கொள்ள

முடியவில்லை மேலும் அவள் நடித்த நடிப்பு! வளர்த்து வானேன்? கலாவதி, அவள் என் நிலையை மாற்றினாள். உள்ளத்தையும் கவர்ந்தாள். வந்தது போலவே திடீரென்று போகவும் போய்விட்டாள். அவள் போனது முதல், நான் அவள் நினைவால் வாடி நலிகிறேன். அவளுக்காகவே நான் காத்திருக்கிறேன்."

"உங்கள் மனம் மாறவே மாறாதா?"

"மாறும். அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு."

"என்ன அது?" என்று பரபரப்புடன் கேட்டாள் கலாவதி.

"நீ என் மீது கொண்ட காதலை மாற்றிக்கொண்டாயானால்...."

"இப் பிறவியில் அது இல்லை கோபால்!"

"இங்கேயும் அதே பதில்தான் கலாவதி!"

முகத்தை முன்றானையால் மூடிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள் கலாவதி.

அழுது ஓய்ந்த கலாவதி விடுதியை விட்டு வெளியே வந்தாள். தள்ளாடி நடந்தாள். 'காலங்கடந்த முயற்சி; காலங்கடந்த முயற்சி' என்று எங்கிருந்தோ யாரோ கூறிக் கொண்டே இருப்பது போல் அவள் செவிகளில் கேட்டுக்கொண்டிருந்தது. வேதனையைத் தாளமாட்டாமல் அவள் ஓடத் தொடங்கினாள்.

வழியில் ஒரு கட்டை. அதில் அவள் கால் இடறிற்று. தடாலென்று தரையில் விழுந்தாள்.

தம் இடத்திலிருந்தபடி சாளரத்தின் வழியே அனைத்தையும் நோக்கிக்கொண்டிருந்த ஜயபாலன் கலாவதிதடுமாறித் தரையில் விழுந்ததும் அங்கிருந்து

ஓட்டமாக ஓடி வந்தார். அதற்குள் வேறு ஒரு புறத்தி லிருந்து விரைவாக வந்த ஜமீன்தாரிணி கலாவதி யைச் சமீபித்து விட்டாள். அதைக் கண்ட ஜயபாலன் கையைச் சொடுக்கி உதறிக்கொண்டு, வந்த வழியே திரும்பிச் சென்றார். பணிமாதரைத் துணைக்கு அழைத்து ஜமீன்தாரிணி கலாவதியை அரண் மனைக்குள் எடுத்துச் செல்வதைப் பார்த்தபடி நின் றிருந்தார்.

இத்தனை காலமாக இல்லாமல் அவர் உணர்வு விழித்துக்கொண்டது. அதற்கு ஏற்பக் கலாவதி வந்து சேர்ந்தாள். பயன்?

## 19. வலையில் சிக்கிய பறவை

கலாவதியைக் கண்டும் அவளைப் பற்றி அறிந் தும் மிகவும் மகிழ்ச்சி கொண்ட ஜமீன்தாரிணியும பெரியஜமீன்தாரும் கோபாலன் அவளைப்புறக்கணித்து விட்டதைக் கேட்டு வருத்தமுற்றனர். கலாவதியைத் தங்களுடனேயே சிறிது காலம் தங்கி யிருக்கும்படி வற்புறுத்தி இணங்க வைத்தார்கள்

பழகப் பழகக் கலாவதிக்கு அக் குடும்பத்தினர் மீது அளவு கடந்த பாசம் ஏற்படலாயிற்று. அதன் விளைவாக அவள் தன்னை, தன் நலத்தைப் பொருட் படுத்துவதைக்கூடக் குறைத்துக்கொண்டு ஜமீன் குடும்பத்தினர் விஷயத்தில் அதிக அக்கறை கொள்ளலானாள். தன்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று தன் தாய்க்கு விவரமாக ஒரு கடிதம் எழுதிவிட்டு ஜமீன் குடும்பத்தைச் சார்ந்த

பெண்போல, ஜமீன்தாரிணியின் அபிமானப் புதல்வி போல அங்கே இருந்து வந்தாள்.

அன்று வெள்ளிக்கிழமை. ஜமீன்தாரிணி ஆலயத்திற்குச் சென்றிருந்தாள். கலாவதிக்கு அன்று காலையிலிருந்தே உடம்பு சரியாகஇல்லை. தலைசுற்றல், மயக்கம், தலைவலி முதலிய கோளாறுகள். மாலையில் சற்றுக் குணம்.தானும் வருகிறேன் என்றுதான் அவள் சொன்னாள். ஜமீன்தாரிணிதான் வேண்டாமென்று அவளை நிறுத்தி விட்டுப் போயிருந்தாள்.

காரியம் ஒன்றும் இல்லை. காற்றுடச் சற்று வெளியே உலாவினால் நலம் என்று இருந்தது கலாவதிக்கு. நந்த வனத்தில் சென்று உலவி வரலாம் என்று எண்ணினாள். பலகணியின் வழியே நந்தவனத்தில் பார்வையைச் செலுத்தினாள். கண்ணில் கோபாலனின் விடுதி தென்பட்டது. உடனே அவன் நினைவு வந்தது. அந்த நினைவு, உள்ளத்தில் ஒரு கிளுகிளுப்பை உண்டு பண்ணியது; பரபரப்பைத் தோற்று வித்தது. விரைந்து சென்று அலங்கரித்துக் கொண்டாள். உல்லாச உணர்வுடன் நந்தவனம் சென்றாள்.

வெளியூர் சென்றிருந்த சின்ன ஜமீன்தார் சற்று முன்புதான் திரும்பி வந்தார். கலாவதியின் நினைவினால் தவித்துக்கொண்டிருந்த அவர் உள்ளத்திற்கும் உடலுக்கும் நந்தவனத்தின் தனிமையும் மெல்லிய காற்றும் வேண்டியிருந்தன. சந்தடியின்றி நந்தவனத்தை அடைந்து ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்.

ஒளி மறைந்து இருள் பரவிக் கொண்டிருந்த சமயம். கலாவதி கண்டத் தளவில் ஏதோ ஒரு சிருங்காரப் பாடலின் மெட்டை இசைத்தபடி மெல்ல நடந்து சென்றுகொண்டிருப்பதைக் கண்டார் அவர்.

"கலாவதி!"

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்த அவள் அங்கே கோபாலனைக் காணவில்லை; சின்ன ஜமீன்தாரைக் கண்டாள். பாம்பை மிதித்தவள் போல் பதறிப் போனாள்!

ஆனால் அவள் கலக்கம் நொடிப் பொழுதுக்குள்ளேயே தீர்ந்து போய்விட்டது. அவள் புத்திசாலி தைரியசாலி. கோபாலனிடம் அவள் பெற்ற தோல்வி வாழ்விலே ஒரு வெறுப்பை உண்டுபண்ணியிருந்தது. ஜமீன்தாரும் ஜமீன்தாரிணியும் காட்டி வந்த கடல் போன்ற பரிவு, உள்ளத்திற்குச் செவ்வையான உரமாகியிருந்தது. ஆகவே அவள் அசைப்பிலே தோற்றிய அச்சத்தை உதறி, "நமஸ்காரம்" என்று கரங்கூப்பினாள்.

"உட்கார் கலாவதி" என்று சற்று நகர்ந்து உட்கார்ந்துகொண்டு ஆசனத்தில் கையால் தட்டிச் சைகை செய்தார் ஜயபாலன்.

அவள் வார்த்தையை வளர்க்க விரும்பாதவள் போல் வெகு சுருக்கமாக, "பரவாயில்லை" என்று கூறிவிட்டு அருகே இருந்த பாரிஜாத மரத்தின் கிளையைப்பற்றிக் கொண்டு ஒய்யாரமாக நின்றாள்.

"நீ அன்று முதல் இங்கேதான் இருக்கிறாய் அல்லவா? அதன் பிறகு என் கண்ணில் படவே

இல்லையா?... என்னைப் பார்க்கவே விருப்பம் இல்லை; அப்படித்தானே?" என்றார் ஜயபாலன்.

'நீங்களாக ஏதாவது எண்ணிக்கொண்டால் அதற்கெல்லாம் நான் பொறுப்பாளி அல்ல."

"அரண்மனைக்குள் நுழைகிறபோது என் தயவு வேண்டியிருந்தது. பிறகு..."

"எல்லோரும் அப்படிச் சொன்னார்கள்."

"எப்படி?"

"ஜமீனில் அணு அசைவதானாலும் சின்ன ஜமீன் தாரின் அனுமதி தேவை என்று."

"கிண்டல் பேச்சு இருக்கட்டும் கலாவதி. அன்று என்னை ராவணனாக மதித்து ஓடினாயே, போன காரியம் முடிவடைந்ததா? ஒரு வேளை அதற்காகத் தான் இங்கே தங்கியிருக்கிறாயோ?"

திடுக்கிட்டாள் கலாவதி. குரலிலும், முகத்திலும் கலவரம் தோன்ற, "எதற்காக?' என்றாள்.

'கோபாலனுக்கு மணமாலை சூட்டத்தான்.'

"நேரமாகி விட்டது. நான் வருகிறேன்" என்று நடந்தாள் கலாவதி.

"போகாதே! நில்! "

ராட்சசன் குரலாக இருந்தது அவர் குரல். கலாவதி பீதியுடன் நின்றாள். ஜயபாலன் தொடர்ந்து பேசினார்.

"கலாவதி, பத்து ஆண்டுகளாக என் உள்ளம் பாலை வனமாக இருந்தது. இப்போது அங்கே ஒரு மலர்ச் செடி. நட்டவர் யார் தெரியுமா? கோபாலன் தான். அதை வளர்த்துப் புஷ்பிக்கச் செய்ய வேண்டியவள் யார் தெரியுமா? நீதான். புரிகிறதோ?"

[illegible] து எதுவுமே புரியவில்லை" என்று [illegible] பரிதாபமாகச் சொன்னாள் கலாவதி. அவர் [illegible] நைந்து போயிற்று.

"கலாவதி, என் மனைவி இறந்து பலகாலம் ஆகியும், பலர் வற்புறுத்தியும் நான் மறுமணம் செய்து கொள்ளவில்லை. கோபாலன் முதலில் பைத்தியமானான். இப்போது தவறான முறையில் இறங்கிவிட்டான். அவன் பைத்தியத்தைத் தெளிவிப்பதற்கென்று மனத் தத்துவ நிபுணரின் ஆலோசனைப்படி ஒரு காரியம் செய்தேன். சங்கரபுரம் என்ற ஊரில் இருக்கிற மரகதம் என்பவளின் மகளை அழைத்து வந்து அவனோடு பழகவிட்டேன். அவன் தெளிவு பெற்றான். ஆனால் அந்தப் பெண் பவானியின் மையலில்வீழ்ந்து விட்டான். அதை அறிந்து அவளைத் துரத்தினேன். ஆனால் அவன் அவளை மறக்க மறுக்கிறான். அதனால் அவன் இனி எவ் வகையாலும் இந்த ஜமீன், வாரிசுப் பதவிக்குத் தகுதி அல்லன். அவன் பெற்றோருக்கோ மகன் அப் பெண்ணை மணந்துவாழ்வதில் இஷ்டம். அவர்கள் குடும்ப பாசத்தில் உழல்பவர்கள். நான் ஜமீன், பரம்பரைக் கௌரவம், குடி படைகளின் நல்லபிப்பிராயம் முதலியவற்றைக் கருதுபவன். ஆகவே எனக்கு அதில் விருப்பம் இல்லை. என்னால்தான் கோபாலன் - பவானி திருமணம் தடைப்பட்டு நிற்கிறது.

"இந் நிலையில் இரண்டு நாளாக என் உள்ளத்தில் ஒரு புது யோசனை. மீண்டும் இல்லறத்தை மேற்கொண்டுஜமீனுக்கு ஒரு நல்லவாரிசை ஏற்படுத்தலாம்

என்பதுதான் அந்த யோசனை. பொருத்தமான சமயத்தில் நீ வந்து சேர்ந்தாய். நீ சாயலில் என் மனைவியைப் போன்றவள்; முன்னாள் குடும்ப உறவினள். முன்பு தான் என் பேச்சை மதியாது போய் அவமானத்தைத் தேடிக் கொண்டாய். இனி மேலாவது என் பேச்சை மதித்துக் கேட்பாயா? கேட்டால் மணம் பெறுவாய்.''

பெருமழை பெய்து ஓய்ந்தாற்போல் இருந்தது கலாவதிக்கு. காலையிலிருந்துதொந்தரவுசெய்து வந்த தலை சுற்றல் முதலிய சிறு நோய்கள் ஜயபாலனின் பேச்சைக் கேட்டதும் குபீரென்று புனர்ஜன்மம் எடுக்கத் தொடங்கின. அதனால் பேசும் திறனற்று வாயடைத்து சோர்ந்து நின்றாள்.

அதே சமயத்தில் ஜமீன் வண்டி வந்தது. ஜமீன்தாரிணி வந்து இறங்கினாள். ஜயபாலன் மெல்ல நழுவினார்.

## 20. ஐயோ! அம்மா!

**த**ள்ளாடி நடந்து வந்து உள்ளே நுழைந்த கலாவதியின் செவிகளில் கோபாலனின் குரல் பலமாக விழுந்தது. காலைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு நின்றாள்.

"அப்பா, அம்மா! உங்களுக்கு ஒரு கோடி நமஸ்காரம். உங்களுக்குப் பிடிக்காத பெண்ணை நான் மணந்துகொள்ளவில்லை; அதே மாதிரி என் மனம் ஏற்காத பெண்ணை நான் மணந்துதான் ஆகவேண்டும் என்று நீங்களும் என்னை வற்புறுத்தாதீர்கள். கலாவதியின் மீது எனக்கு அநுதாபம் கரைகடந்து

இருக்கிறது. காதல் கடுகளவும் இல்லையே! நான் என்ன செய்வது?"

வெடித்து விடுகிறாற்போல் விம்மிய மார்பை இரு கைகளாலும் அழுக்கிக் கொண்டாள், மறைவில் நின்றிருந்த கலாவதி. 'கலாவதியின் மேல் காதல் கடுகளவும் இல்லை'-இந்தச் சொற்கள் அவள் செவியை விட்டுஅகல மறுத்தன.அவள் உயிர்க் குலை துடியாய்த் துடித்தது.

"அப்பா கோபாலா, உன் மனம் புரிகிறது. எனக்காகச் சற்று விட்டுக்கொடேன். உன் தாயின் பரிதாப முகத்தை ஏறிட்டுப் பாரேன். அவள் யாரோ முன்பின் தெரியாத பெண். கலாவதி நம் உறவினர் மகள்-"

ஜமீன்தாரின் பேச்சு முடியவில்லை; கோபாலன் ஓவென்ற பெருங்குரலில் கர்ஜிக்கத் தொடங்கினான்.

"அப்பா, என்னிடம் அந்தக் கதையெல்லாம் சொல்லாதப்பா! அந்தப் பெண் ஏன் இங்கே வந்தாள்? எதற்கு வந்தாள்? என் பைத்தியத்தைத் தெளியவைக்கத்தானே வந்தாள்?கைக்கூலிபெற்று வந்தவளாகவே இருக்கட்டும்; வந்தாளா இல்லையா? எப்படி வந்தாள்? என்ன எண்ணி வந்தாள்?பைத்தியத்தோடுநெருங்கிப் பழக வருபவள் என்ன எண்ணி வரமுடியும்? உடல், உயிர், இரண்டையும் இழக்கச் சித்தமாகத்தானே வந்திருக்க முடியும்? அவள் அப்படியே வந்தாள். எவ்வளவு பெரியதியாகம்! ஏன்? இதைநீங்கள் குறிப்பிடும் மேற்குடிப்பெண் யாரைக்கொண்டாவது செய்திருக்கலாமே! அப்படிச் செய்திருந்தால் இப்போது இப்படிப்

பட்ட ஒரு பிரச்சினைக்கே இடம் நேர்ந்திராதே! வருவாளா உங்கள் உயர்குடிப் பெண்? எண்ணிப் பாருங்கள் அப்பா!''

'ஆகா! ஆகா! பரம உத்தம சிகாமணி என் கோபாலன்—!''

திரும்பத் திரும்ப இதையே உச்சரித்தது கலாவதியின் உள்ளம்.

'கேவலம் அழகில் அறிவைப் பறி கொடுத்தோ, ஆடல் பாடல்களில் உள்ளத்தை நெகிழவிட்டோ அந்தப் பெண்ணை நினைத்து உருகவில்லை என் கோபாலன். மேருமலையை நிகர்த்த அவளுடைய தியாகத்தை எண்ணி, அன்பை நினைந்து நெக்குருகுகிறார்! இது அல்லவா தெய்விகக் காதல்!'

கலாவதி உணர்ச்சி வசமாகிச் சுவரில் சாய்ந்தாள். சற்று முன் அவள் உடலிலே கூடியிருந்த களைப்பெல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்தே போயின. மெல்ல நடந்து வெளி வராந்தாவை அடைந்தாள்.

''உன்னை எங்கெல்லாம் தேடுவது அம்மா?'' என்று கூறியபடி அங்கே வந்தார் சுந்தரமூர்த்தி. அருகில் வந்ததும், ''சற்று என்னோடு வருகிறாயா?'' என்றார்.

கலாவதி பதிலே சொல்லவில்லை. அவர் பின்னோடு மௌனமாக நடந்தாள்.

வாசலில் ஜமீன் கார் புறப்படத் தயாராய் நின்று கொண்டிருந்தது.

கதவைத் திறந்த சுந்திரமூர்த்தி, "ஏறிக்கொள் அம்மா" என்ருர்.

கலாவதி மிக்க ஆச்சரியத்தோடு நிமிர்ந்து பார்த்தாளே தவிர, ஏன் என்று கேட்கவில்லை. காரில் ஏறி அமர்ந்து கொண்டாள்.

காரின் ஓட்டத்தால் ஏற்படும் ஓசையையும் இடையிடையே கார்க்குழலின் சத்தத்தையும் தவிர வேறு சந்தடியே சிறிதும் இன்றி நீண்ட ரஸ்தாவிலே காற்றினும் கடிதாக ஓடிக்கொண்டிருந்தது கார்.

வண்டி எங்கே செல்கிறது என்பதைக்கூட அறிந்து கொள்ளாமல் பிரயாணம் செய்துகொண்டிருந்தாள் கலாவதி. அவளுடைய போக்கு சுந்தரமூர்த்திக்கு அளவு கடந்த ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று. நேரம் செல்லச் செல்ல அந்த ஆச்சரியம் அளவைக் கடந்தது.

"ஏன் கலாவதி, நாம் எங்கே போகிருேம் என்று தெரியுமா உனக்கு?"

"தெரியாது."

"அப்படியே சற்றுப் படுத்துத் தூங்கு. இரண்டு மணி நேரத்தில் நாம் முகிலம் பட்டியை அடைந்து விடுவோம். அப்போது உன்னை எழுப்புகிறேன்."

கலாவதி, சரி என்று படுத்துக்கொண்டாள். படுக்கை கொள்ளவில்லை. சிறிது நேரத்தில் எழுந்து உட்கார்ந்தாள்.

"சங்கரபுரம் எங்கே இருக்கிறது?"

"சற்று முன் ரஸ்தா முகப்பிலே இடிந்த கோயில் ஒன்று தென்பட்டதே, கவனித்தாயா? அந்தக்

கோயிலே ஒட்டிக் குறுக்கு ரஸ்தா ஒன்று மேற்கே செல்கிறது. அதில் நாலு கல் சென்றால் சங்கரபுரந் தான்."

கலாவதி சுற்றுப்புறத்தை நன்கு பார்த்து வைத்து கொண்டாள். பிறகு உடல் அசதியால் மீண்டும் படுத்துக்கொண்டாள்.

கார் முகிலம் பட்டிக்குள் நுழைந்தது. கலாவதி டிரைவருக்கு வழி தெரிவித்த பின் சுந்தரமூர்த்தி யிடம், "இப்போது கேட்கிறேன்; திடீரென்று இப்போது இங்கே எனனைக் கூட்டி வரக் காரணம் என்ன?" என்றாள்.

அப்போது கார் அவள் வீடு இருக்கும் தெருவில் புகுந்தது. கலாவதி தன்வீட்டைச் சுட்டிக் காட்டினாள்.

வீட்டு வாயிலில் சிலர் நின்றிருப்பதைக் கண்ட தும் 'திக்'கென்றது அவளுக்கு. அதே சமயம், "உன் தாய் இறந்துவிட்டாள் அம்மா. செய்தி வந்ததும் சின்ன ஜமீன்தார்தான் உன்னைக் கொண்டுவிட ஏற்பாடு செய்தார்" என்றார் சுந்தரமூர்த்தி.

"ஐயோ அம்மா!" என்று வீரிட்டாள் கலாவதி.

## 21. புகழ் நிலைத்தது!

"நமஸ்காரம்."

ஜயபாலன் திரும்பிப் பார்த்தார்.

"கலாவதியா?"

அவா வியப்பும் திகைப்பும் எல்லையைக் கடந்தன.

"ஆம். கலாவதியேதான்" என்று கூறியபடி புன்னகைப் பூஞ்சோலையாய் உள்ளே நுழைந்தாள் கலாவதி.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?"

"ஒ....ன்...று...ம்...இ...ல் ..லே...ஏற்கனவே மனங் குழம்பி இருந்த நீ தாயின் பிரிவால் மேலும் நைந்து உன் ஊரில், உன் வீட்டில், ஒரு மூலையிலே விழுந்து கிடப்பாய் என்று எதிர்பார்த்தேன். அதற்கு மாருக..."

"அவள் விதி மாண்டது; அவள் போனாள். என் கடமையை நான் செய்து முடித்தேன். இதில் துக்கப் பட என்ன இருக்கிறது? அப்படி மனம் நைந்து போய் வீட்டில் கிடந்து உழல நானும் என்ன பவானியா?'

"பவானி!...அவளைப்பற்றி..."

"அவளைப் பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். நான் இப்போது நேரே அங்கிருந்துதான் வருகிறேன் உங்களைக்காணவென்றுதான் ஓடோடியும்வந்தேன்.''

"என்னைக் காணவென்ரு?...ஏது?..."

"இவ்வளவுதாஞ நீங்கள்? பூ. அன்று அஸ்தமன வேளையில் நந்தவனத்தில் என்ன என்னவோ சொன்னீர்களே? எல்லாம் வெறும் வாய்ப் பந்தல்தாஞ? சரி சரி. அப்படியாஞல் நான் வந்த வழியே திரும்புகிறேன்."

கலாவதி புறப்பட்டாள். ஜயபாலன் தம்மை மறந்து, "பொறு கலாவதி!" என்று அவளைத் தடுத்து நிறுத்திஞர். அவர் உள்ளத்தில் போதை ஏறியது.

"உன் மனம் மாறிவிட்டதா கலாவதி? நிஜ மாகவே நீ என்னை மணந்துகொள்ளத் தீர்மானித்து விட்டாயா?"

"ஆம் பிரபு. முதலில் கோபாலன்மீது ஆசை வைத்தது உண்மைதான். அவர் கிட்டாப் பொருள் என்று ஆகிவிட்டதும் என் மனம் சோர்ந்து விட்டது. தாயையும் இழந்து தத்தளித்தபோது, 'இனி இவ் வுலக வாழ்வில் சுகம் என்ன இருக்கிறது?' என்று உள்ளம் சிறிது ஏங்கத்தான் செய்தது. உடனேயே உங்கள் அழகுருவம் மனக்கண்முன் பளிச்சிட்டது; அன்புமொழிகள் செவியிலே ரீங்காரம்செய்தன. ஈமக் கடன்கள் முடிந்ததும் தங்களைக் காணப் புறப்பட் டேன். வழியில் சங்கரபுரம் ரஸ்தா குறுக்கிட்டது. ஒரு பைத்தியக்கார எண்ணம்; 'இந்த மனிதர் கோபாலன் அந்தப் பவானியை நினைத்து இப்படி ஏங்கி ஏங்கிச் சாகிறரே, அந்தப் புண்ணியவதி அங்கே எப்படி இருக்கிருள் என்று அறிய வேண்டும்' என்பதுதான் அந்த எண்ணம். அங்கே சென்று பார்த்தேன்"—

"என்ன கண்டாய் கலாவதி? அங்கே அவள் வேறு ஆடவனேடு..."

"சே சே சே! வாயைக் கழுவுங்கள். கோபால னின் நிலையே பரவாயில்லை என்று சொல்லும்படி இருக்கிறது பவானியின் நிலை. பைத்தியமே பிடித்து விட்டது அவளுக்கு!"

"அது கிடக்கிறது கலாவதி. நம்மைப் பற்றிப் பேசு. நீயோ நானே ஒருவரின் அநுமதியையும் எதிர்

பார்க்க வேண்டியது இல்லை. திருமணத்தை எப்போது நடத்தலாம் சொல்?

"சொல்லட்டுமா?"

"விளையாடாதே கலா; சீக்கிரம் சொல்."

"நான் சொல்கிறபடி நடப்பதாக வாக்குக் கொடுங்கள்."

"இனி உன் பேச்சுக்குக்கூட மாறுதல் உண்டா கலா?"

"தவற மாட்டீர்களே?"

"மாட்டேன், மாட்டேன், மாட்டேன்!"

"இம்மாத இறுதிக்குள் இந்த ஜமீனில் இதுவரை நடந்திராத அளவு உயர்ந்த முறையில் கோபாலனுக்கும் பவானிக்கும் திருமணம்—"

"உனக்குப் பைத்தியமா கலாவதி?"

"குறுக்கே தடுத்துப் பேசுகிறீர்களே?"

"உலகம் தூற்றுதா?"

"நாற்பது வயதுக்குமேல் நீங்கள் மணமாலை சூட்டிக் கொள்வதை மட்டும் உலகம் தூற்றுதா? 'மகனுக்குரிய நலனைத் தேடி வைத்துப் பிறகே சுயநலனில் கருத்தைச் செலுத்தினர்' என்ற ஒரு நல்ல பெயராவது இருக்கும் உங்களுக்கு."

"பவானிக்குப் பைத்தியம் என்றுயே?"

"முழுப் பைத்தியம்அல்ல; நான் உறுதி சொல்லி வந்திருக்கிறேன். அவள் முழு நம்பிக்கையோடு காத்திருக்கிருள்."

ஜயபாலன் சிறிது தயங்கினர். "கலா!" என்று தடுமாறினர்.

"முழுவதும் கேளுங்கள். திருமணம் இனிது நிறைவேறியபின் பிரமுகர்களுக்கு ஒரு விருந்து மண மக்கள் ரதியும் மதனும் போல மணப் பந்தலில் வீற்றி ருக்க, அங்கே, அப்போது, இந்தக் கலாவதியின் நடனக் கச்சேரி ஒன்று நிகழவேண்டும். இப்படியாகப் பெரிய ஜமீன்தார், ஜமீன்தாரிணி அம்மாள், இளைய ஜமீன்தார் கோபாலன், இளைய ஜமீன்தாரிணி பவானி, மற்றும் உள்ளோர் அனைவரின் உள்ளமும் ஆனந்த நிலையில் ஊஞ்சலாடுகிறபோது இந்தக் கலாவதியின் ஆன்மா..."

"இந்த ஜயபாலனின் ஆன்மாவில் ஐக்கியமாக வேண்டும். அதுதானே?" என்று வார்த்தையைப் பூர்த்தி செய்தார் ஜயபலான்.

கலாவதி பதில் சொல்லவில்லை. அவள் கடைக் கண்களில் பளிச்சிட்ட நீர் முத்துக்கள் அவரை நோக்கிச் சிரித்தன.

* * *

கலாவதியின் திட்டப்படி கோபாலன் - பவானி திருமணத்திற்குரிய எல்லா ஏற்பாடுகளும் தடபுடலாக நடைபெற்றன. ஜயபாலன் கலாவதியின் கைப் பாவையாக ஆடினார்.

கோபாலனின் ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. இவ்வளவும் கலாவதியால் என்று அறிந்தபோது அவன் உள்ளம் நன்றியுணர்வினால் பொங்கியபடி இருந்தது.

திருமணத் திருநாள் நெருங்கிற்று. மரகதமும் பவானியும் மற்றுமுள்ள அவர்கள் சுற்றத்தாரும்

பெரிய நத்தம் ஜமீனில் வந்து கூடினர். ஜமீன் மாளிகை இந்திரலோகமாய்க் காட்சி அளித்தது.

குறித்த நாளில் நல்ல நேரத்தில் பவானி கோபாலனுக்கு மணமாலை சூட்டினாள். அவன் அவள் கரங்களை எடுத்துக் கண்ணில் ஒற்றிக்கொண்டான்.

ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்த பந்தலில் விருந்துபசாரம் நடந்தது. மணமக்கள் பந்தலின் நடுவே சோபாவில் வீற்றிருந்தனர். அவர்கள் எதிரே பசும் பொற்கொடியென வந்து நின்றாள் கலாவதி. அவளே சர்வாங்க சுந்தரி. அப்போதைய அவள் அலங்காரம் காண்போர் கண்ணைக் கூசவைத்து உள்ளத்தை ஒருமிக்கக் கொள்ளைக்கொள்வதாக இருந்தது. அவள் இதழ்க்கடையில் மிளிர்ந்தமோகனச் சிரிப்போ மூவுலகும் விலைமதிக்கத் தக்கதாயிருந்தது

சபையை நோக்கி வணங்கினாள். பிறகு கோபாலனை நோக்கிக் கரம் குவித்தாள்.

சுருதி ஒலித்தது. பின்பாட்டு ஒலித்தது. கலாவதி ஆடினாள். 'நீயே என் தெய்வம்'என்ற பாடலுக்கு அற்புதமாக அபிநயம் பிடித்து ஆடினாள். வர வர, துரித காலத்தில் ஓடின, பாடலும் ஆடலும். அனைவரும் திறந்தவாய் மூடாமல், வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். பாட்டின் முடிவு; ஆட்டத்தின் முடிவு; அவள் பம்பரமாய்ச் சுழன்றாள். சுழன்று சுழன்று சுழன்று கொண்டே இருந்தாள். பின் பாட்டுக்காரர் அந்தச் சுழற்சியின் வேகத்திற்கு, 'நீயே என் தெய்வம்' என்ற ஒரே அடியையே திருப்பித் திருப்பிப் படுவேகமாகப் பாடிக்